# புது

## டீலக்ஸ் சீலிங் விசிறி

- எழிற் தோற்றமும், புது மோஸ்தரான மழுமழுப்பான உருவமும் கொண்டது.
- முற்றிலும் வார்ப்பினுலானது, இலேசானது.
- நவீன உற்பத்தி உத்திமுறைகளின்படி செய்யப்பட்டதால், தரத்தில் அபி விருத்தியுடன் தொந்திரவற்ற இயக்கமும் கொண்டது
- சுலபமாகச் சுழற்றவும் இணைக்கவும் கூடியது.

# புது

## முறையிலமைந்த ரெகுலேட்டர்




- நவீன மோஸ்தரில் செய்யப்பட்டது.
- மின் கம்பிகளை மூட மிகவும் ஏற்வையானது.
- இருபுறமும் திருப்பக்கூடிய புது முறையிலமைந்த ரோடரி ஸ்விச் கொண்டது.
- இயங்கும்போது சூடேருமலிருக்க சோக் காயில் யூனிட் கொண்டது.

**ஓரியண்ட் விசிறிகள்**

இரண்டு வருட உத்திரவாதம் கொண்டது

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்., கல்கத்தா-54



**சர்குணம்பாள் — ராதாகிருஷ்ணன் B. V. Sc.**

இவர்களின் திருமணம் சென்னை, ராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீமதி நாராயணீய கலியாண மண்டபத்தில் 1971 மே மாதம் 9-ம் தேதி யன்று நடைபெற்றது.

மணமகள்: ராஜா சர் அண்ணாமலை செட்டியார் டிரஸ்ட் மானேஜர் ஸ்ரீ ஆர். வெங்கடராம ஐயரின் புதல்வியும், செட்டிநாட்டு அரசரின் ஏஜண்ட் ஸ்ரீ கே. ஆர். ராமச்சந்திர ஐயரின் அபிமானப் புத்திரியுமாவார்.

மணமகன்: அதிராமப்பட்டினத்தில் வெட்டர்னரி அஸிஸ்டண்ட் சர்ஜன். சென்னை 'எஸ்ஸோ' நிறுவனத்தில் செக்ஷன் தலைவரான ஸ்ரீ என். ராமச் சந்திர ஐயரின் புதல்வர்.



மாயூரம் ஸ்ரீ ராமமூர்த்தியின் குமாரன் செஞ்சிவி: **ஆர். சந்திர சேகரன்** B. Sc., B. T., க்கும், மதுரை மத்திய எக்ஸைஸ் உதவி கணக்கு அதிகாரி ஸ்ரீ ஆர். விஸ்வநாதய் யரின் குமாரி சௌ. **ராதாவுக்கும்** மே மாதம் 7-ம் தேதி மாயூரத்தில் சிறப்பாக திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!



# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, ஆனி 6 ★ ஜூன் 20, 1971






| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |


செல்வி மாலதி - செல்வன் சிவானந்தம்



செல்வன் சிவகுமார் - செல்வி மல்லி ரோஜா



தஞ்சை ஜில்லா பிரபல மிராசுதார் காட்டூர் திரு ராமையா முதலியார் அவர்கள் புதல்வி திருநிறைச் செல்வி மாலதி B. A.க்கும், திருநிறைச் செல்வன் சிவானந்தம் B. (Tech) அவர்களுக்கும் — திரு ஜெ. வையாபுரி (Jt. Director of Technical Education) அவர்களின் புதல்வி திருநிறைச் செல்வி மல்லி ரோஜாவுக்கும், திருநிறைச் செல்வன் சிவகுமார் B. E. அவர்களுக்கும் 26 - 5 - 71 அன்று சென்னை, எட்வர்ட் எலியட்ஸ் சாலையிலுள்ள இராஜேசுவரி திருமண மண்டபத்தில் அதிவிமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. மேற்படி மணவிழாவுக்கு, முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் தலைமை தாங்கினார்கள். மற்றைய தமிழ்நாடு அமைச்சர்களும், பிரமுகர்களும், நண்பர்களும், உறவினர்களும் வருகை தந்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!

N.T. ராமராவ் அளிக்கும்

# கண்ணன் கருணை




N.T. ராமராவ் · T.R. மகாலிங்கம் · மனோகர்
ராமதாஸ் · O.A.K. தேவர் · உதயகுமார்
K.R. விஜயா · S. வரலட்சுமி · ரத்னா · கீதாஞ்சலி

ஜூன் 18உ முதல் சென்னை மற்றும் தமிழகமெங்கும்

மலர் 30

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்





இதழ் 47

# பங்களா தேஷும் பாரதமும்

கிழக்கு வங்காளத்தில் லட்சக்கணக்கான மக்கள் படுகொலை செய்யப்படுவதால் அந்தப் பகுதியில் ஹிந்துக்கள் முஸ்லீம்கள் அனைவருமே பயப்பிராந்தியில் ஆழ்ந்திருக்கின்றனர். மக்கள் கூட்டம் கூட்டமாக அங்கிருந்து வெளியேறி இந்தியாவுக்கு வருகின்றனர். இவ்விதம் வரும் ஏராளமான அகதிகள் இந்தியாவில் தஞ்சம் புகுந்திருக்கின்றனர். இந்தியாவின் பொருளாதாரம் ஏற்கனவே படுமோசமான நிலையில் உள்ளது. இச்சமயத்தில் பங்களா தேஷ் போரினால் ஏற்பட்டுள்ள அகதிப் பிரச்னையும் சேர்ந்திருக்கிறது. இந்திய சர்க்காரின் செலவினங்கள் ஏகத்தாறாக உயர்ந்துள்ளன. இன்னமும் இச்செலவு ஓங்கும் என்று அஞ்சுகிற நிலை உண்டாகியுள்ளது. இந்த நெருக்கடி நிலையிலும் ஒரே ஒரு கட்சி தில்லி அரசாங்கப் பொறுப்பை வகிப்பது பொருந்தாது. கட்சிப் பற்றற்ற தேசிய அரசாங்கம் நிறுவப்பட்டு, தேச நிருவாகத்தை ஏற்பதற்கு அவசியம் ஏற்பட்டிருக்கிறது. நான் மட்டும் ஸ்ரீ சவானாக இருந்தால் இன்றுள்ள தில்லி சர்க்காரை அகற்றிவிட்டு, அதனிடத்தில் எவ்விதக் கட்சித் தொடர்பும் இல்லாத தேசிய சர்க்கார் அமைத்தாக வேண்டும் எனப் பிரகடனம் செய்திருப்பேன். இவ்விதம் ஒரு தேசிய சர்க்கார் அமைக்கப்பட்டால் அந்நிய வல்லரசுகளுக்கெல்லாம் இந்தியாவிடம் புதிய அக்கறையும் ஈடுபாடும் பிறக்கும். இன்று இந்தியாவின் பிரச்னைகளில் அசிரத்தையாக இருக்கும் அந்நிய நாட்டினர், நம் நாட்டில் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டதொரு சர்க்கார் அமைந்தால், நம்மைப் பற்றிய தங்கள் கருத்தை மாற்றிக் கொண்டு, நமக்கு உதவி புரிய முன்வருவார்கள். நான் சவானாக இருந்தால் இவ்விதமாக ஒரு நல்ல மாறுதலுக்கு அடிகோல முடியும் என்று சொல்வதில் என்ன பயன்? சவான் சவானாகத்தான் இருப்பார்!

* * *

இன்று பங்களாதேஷ் பிரச்னையில் பாகிஸ்தானும், உலக நாடுகளும் நடந்து கொள்ளும் போக்கைக் கவனிக்கும் போது, இந்தியா பாகிஸ்தான் இவ்விரு நாடுகளின் பொருளாதாரமும் அடியோடு நாசமானபின்தான் போரை நிறுத்திப் பேச்சு வார்த்தையில் இறங்குவார்கள் என்று அஞ்சுகிறேன். என்னுடைய இந்த அச்சம் தவறாகப் போக வேண்டும் என்றே விரும்புகிறேன்.

பிரிட்டிஷ் மக்களிடம் நான் வைத்திருந்த நம்பிக்கையைப் பாதிக்கும் விதத்தில் அந்த நாடு நடந்து கொள்கிறது. இந்திய பாகிஸ்தான் நல்லுறவு முறிந்து அவை விரோத நாடுகளாவதில் பிரிட்டனுக்கு ஏதேனும் விஷமத்தனமான திருப்தி உண்டாகிறதோ என்று கூட எண்ணத் தோன்றுகிறது. பாகவதக் கதையில் கஜேந்திரனின் காலை முதலை கவ்விக் கொண்டது போல், இன்று தெற்காசியாவின் காலை சீன துராசை கவ்விக் கொண்டிருக்கிறது. இப்போது இந்த அபாய நிலையை அகற்ற சர்வதேச வல்லரசுகள் அவசர உணர்வுடன் முயற்சி எடுக்காவிட்டால் சுதந்திர உலகத்துக்குத் தவிர்க்க முடியாத நஷ்டம் ஏற்பட்டு விடும்.

இந்தச் சந்தர்ப்பத்தில் இந்தியா எடுக்க வேண்டிய முக்கியமான நடவடிக்கை, கட்சிப் பற்றற்ற உண்மையான தேசிய சர்க்காரை உடனடியாக அமைத்து, நாகரிக உலகம் முழுவதன் உதவியையும் கோரி, பாகிஸ்தானின் அடக்குமுறையை முடித்து வைப்பதே ஆகும்.

* * *

பங்களாதேஷ் போராட்டத்திலிருந்து இந்தியா பெற வேண்டிய படிப்பினையும் உள்ளது. இப்போது நடப்பது போல் ஹிந்தித் திணிப்பைத் தொடர்ந்து நீடித்தால் அது இந்தியாவை இரண்டாகப் பிளந்துவிடும். அந்தந்தப் பகுதிகளில் பிரதேச மொழிகளுக்கு ஓரளவு சலுகை தந்துவிட்டு, அகில தேச அடிப்படையில் ஹிந்தியை வலுக்கட்டாய முறையில் தொடர்பு மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் ஆக்கிவிடலாம் என்று நினைப்பது வெறும் கானல் நீர். இது

ஒருநாளும் நடைமுறைக்கு வராது. இந்த நடவடிக்கை சண்டையிலும் ஒழுங்கீனத்திலுமே கொண்டுவிடும்.

பொதுவான ஒரு மதத்தைப் பின்பற்றும் மக்களும் மொழிப் பிரச்னை காரணமாகப் பிரிந்து போவார்கள் என்று பங்களா தேஷ் நம் கண்ணுக்குமுன் மெய்ப்பித்துக் காட்டி விட்டதைப் பார்த்துப் படிப்பினை பெறுவோமாக. ஹிந்துக்களைவிட முஸ்லீம்கள் அதிக மத உணர்வு பெற்றவர்கள். இந்திய முஸ்லீம்களுக்கும் இஸ்லாம் மதம்தான் முதல் முக்கியத்துவம் வாய்ந்த விஷயம். அதற்குப் பிறகுதான் மற்ற விஷயங்களில் அவர்களுக்குப் பற்றுதல். ஹிந்துக்களுக்கோ இவ்வளவு தீவிரமான மத உணர்வு கிடையாது.

உண்மையான மத ஈடுபாடு இல்லாமல், அர்த்தமற்ற சடங்குகளிலும், அதைவிட மோசமான போலித் தத்துவ வாதங்களிலும் பக்தியை மூடி மறைப்பவர்களே நம்மில் பெரும்பாலோர். ஆனால் மொழி உணர்வு நமக்கு அதிகம். மொழி என்பது வலிமை வாய்ந்த ஒரு சக்தியாக நம்மிடை நிலவி வருகிறது. எனவே, ஹிந்தி மக்கள் அளவுக்கு மீறிய தவறான நம்பிக்கை கொண்டு தங்கள் மொழியைப் பலவந்தமாகத் திணிக்க முற்பட்டால், இந்தியா ஹிந்திப் பகுதி என்றும், ஹிந்தி வழங்காத பகுதி என்றும் இரண்டாகப் பிளந்து போகும். பங்களா தேஷைப் பார்த்து இந்த எச்சரிக்கையைப் பெறுவோம்.

(ராஜாஜி ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)

# ராஜாஜியின் கருத்துக்கள்

நிதிமந்திரி மைதாவின் மீதும், மோட்டா ரகத் துணியின் மீதும் உத்தேசித்திருந்த வரி உயர்வை ரத்து செய்திருக்கிறார். இது குறித்து வர்த்தக சமூகத்திலும், மற்றோரிடையும் போதிய விஷய ஞானமில்லாதவர்கள் திருப்தி கொள்வர். ஆனால் உண்மையில் சர்க்கார் காட்டியுள்ள 'தயாளம்' சொற்பமானதே. அகில இந்தியாவுக்கும் பட்ஜெட் போடுவதென்பது ஒரு சிக்கலான சூத்திரமாகும். அது வெறும் கணக்கு அல்ல. இப்போது நிதிமந்திரி ஓரிரு இனங்களில் வரியை ரத்து செய்தாலும் சர்க்கார் உத்தேசித்துள்ள செலவினங்கள் மாறிவிடவில்லை. எனவே, வரியை ரத்து செய்துள்ள அளவுக்கு வரவு குறைவதால் வரவுக்கும் செலவுக்கும் இடையே உள்ள பற்றுக்குறை அதிகரிக்கும். பற்றுக்குறையினால் ஏற்படும் பாதகமான விளைவுகள் பல. காகிதப் பணத்தை அச்சிட்டுப் பற்றுக்குறையை நீக்கப் பார்ப்பார்கள். இதனால் விலைவாசிகள் மேலும் உயரும். வரவு, செலவு இரண்டையுமே நன்கு மதிப்பிட்டுச் செய்வதே யுக்தமான தேசிய பட்ஜெட்.

★

பிரதமரின் பெயரைச் சொல்லி ஸ்டேட் பாங்கியிலிருந்து ரூபாய் அறுபது லட்சத்தை மோசடியில் பெற்ற நகர்வாலாவை விசாரித்துத் தண்டனை வழங்குவதில் அசாதாரணமான அவசரம் காட்டப்பட்டுள்ளது. எனவே, இவ்விஷயமாக மக்களுக்குத் தெரியாமல் எதையோ மூடி வைக்கப் பார்க்கிறார்கள் என்ற சந்தேகம் எழுந்திருப்பது நியாயமே. மேலிடத்தின் ஆதரவு பெற்று ஏற்கனவே இந்த ரீதியில் பட்டுவாடா நடந்திருப்பதால்தான் நகர்வாலா இவ்வளவு எளிதாக ஸ்டேட் பாங்கியிலிருந்து இவ்வளவு பெரும் தொகையைப் பெற்றிருக்கிறார் என்று தோன்றுவதில் தவறில்லை. குறைந்தபட்சம் இவ்விஷயமாக நகர்வாலா என்ன சொல்கிறார் என்பதையேனும் அறிவதற்கு மக்கள் உரிமை பெற்றிருக்கின்றனர்.

★

ராஜ்ய சர்க்கார்கள் நடத்தும் லாட்டரித் திட்டங்கள் நம் மக்களின் மனப் போக்கையே மோசமான முறையில் பாதித்து விட்டன என்பது சர்வ நிச்சயம். ஏராளமான கிளப்புகளிலும், மற்ற விடுதிகளிலும் லைசென்ஸ் இல்லாமல் சூதாட்டம் நடைபெறுவதைப் பத்திரிகைகளில் காணப்படும் போலீஸ் அறிக்கைகள் வெளிப்படுத்துகின்றன. சர்க்கார் நடத்தும் லாட்டரிதான் இதற்குக் காரணம். சர்க்கார் லாட்டரியில் லட்சத்தில் ஒருவர்தான் பரிசு பெறுகிற வாய்ப்பு உள்ளது. மாறாக, தனியார் நடத்தும் லாட்டரிகளில் பங்கு பெறுவோருக்கு அதிருஷ்ட வாய்ப்பு அதிகம் இருக்கிறது. தனியார் சூதாட்டத்தில் பரிசுத் தொகைகள் சர்க்கார் தருவதைவிட மிகக் குறைவாக இருக்கலாம். எனினும்,







அவையும் மக்களின் சபலத்தைத் தூண்டிவிடக் கூடிய பெரிய தொகைகளே ஆகும். ஆக, அரசாங்கமே லாட்டரி நடத்துவது சூதாட்டத்தில் மக்களின் மனத்தை ஈடுபடுத்தி மாசுறச் செய்துவிட்டது. போலீஸாரால் சில இடங்களில் நடக்கும் சூதாட்டத்தையே கண்டு பிடிக்க முடியும். உண்மையில் இன்னும் ஏராளமாகச் சூதாட்டங்கள் நடைபெறும். சூதாட்ட மனப்பான்மையைத் தூண்டுவது, கள் குடிக்கச் சபலம் ஊட்டுவது— இவ்விரண்டில் எது பெரிய தீமை என்று சொல்வது கடினம்.

★

ஒரு மனிதன் உயிர் வாழ வேண்டுமாயின் உணவு உட்கொள்ள வேண்டும். உணவு இல்லாவிடில் உடல் நசித்துப் போகும். இவ்விதமே ஓர் அரசியல் கட்சி உயிர் வாழ வேண்டுமானால், அதற்கென ஒரு பணி இருக்க வேண்டும். உழைப்பின்றி ஓர் அரசியல் கட்சி உயிர் வாழ இயலாது. சிதறிய சக்திகளைத் தேசிய அடிப்படையில் ஒன்று திரட்டி உழைத்தாலன்றி, தான் நசித்துப் போக வேண்டியதே என்று ஸ்தாபன காங்கிரஸ் உணர வேண்டும். தனியாகவோ, பிறர் உதவியுடனோ தேர்தலில் அக் கட்சி போட்டியிடுவது அதன் இஷ்டத்தைப் பொறுத்தது. ஆனால் இதைவிட முக்கியமான அம்சம், அக்கட்சி மிகப் பெரிய எதிர்க்கட்சி என்கிற முறையில் தனக்கென ஒரு சிறப்பான பணியை மேற்கொள்வதேயாகும். அரசியல் சாஸனத்தைக் காக்க வேண்டியதே தனது சிறப்புப் பணி என்று அது கருத வேண்டும். சாஸனம் அளிக்கும் சுதந்திர உரிமைகளைப் பெரும்பான்மை பலம் கொண்ட சர்க்கார் அகற்றிவிட உத்தேசித்திருக்கிறது. இவ்விதம் நேராமல் காப்பதே தன் கடமை என்று ஸ்தாபன காங்கிரஸ் நிர்மானிக்க வேண்டும். ஸ்ரீ நிஜலிங்கப்பா அக்கிராசனப் பொறுப்பை ஸ்ரீ ஸாதிக் அலியிடம் கொடுத்த போது, சாஸன உரிமைகளைக் காக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியது குறிப்பிடத்தக்கது. மேலும் மேலும் மக்கள் சுதந்திரத்தை நோக்கிச் செல்லத்தான் சாஸனம் பயனாக வேண்டுமேயன்றி, சர்க்கார் ஆதிக்கம் அதிகரிப்பதற்கு அல்ல. இப்போது ஸ்தாபன காங்கிரஸிலிருந்து பல ஈக்கள் விலகி, ஆள்கிற காங்கிரஸ் என்ற சிலந்தி வலையில் சிக்கி வருகின்றனர். இந்த நிலையிலும் ஸ்தாபன காங்கிரஸ் உயிர்ச் சக்தியுடன் வாழ வேண்டுமாயின், அது சாஸனத்தைப் பாதுகாக்கும் உயர் பணியில் ஈடுபட வேண்டும்.

★

தேசப் பொருளாதாரம் குறித்து மக்களுக்கு நல்ல விஷய ஞானத்தைப் போதிக்க வேண்டும் என்ற இலட்சியத்தைக் கொண்ட கட்சிக்கும், ஆட்சியதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்ற இலட்சியத்தைக் கொண்ட கட்சிகளுக்கும் இடையில் பெருத்த மாறுபாடு உள்ளது. (ஆட்சியதிகாரத்தை விரும்பும் கட்சிகளும் தேசத்தின் பொதுநலனை விரும்புகின்றன; ஆயினும் இது அவற்றின் இரண்டாவது இலட்சியமேயாகும்.)

"வாக்காளர்களுக்கு அறிவு போதிக்கவேண்டும்; எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும்

அந்த அரசாங்கத்துக்கு அறிவிக்க வேண்டும்'' என்பதே சுதந்திரக் கட்சியின் முதல் இலட்சியம். இந்த இலட்சியம் பற்றி எழுந்துள்ள ஒரு தவறான அச்சத்தைக் களைய விரும்புகிறேன். சுதந்திரக் கட்சி மற்றக் கட்சிகளைப் போல் அதிகாரத்தைத் தேடிப் போகவில்லை; ஆயினும் அதனிடமும் அதிகாரமும், ஆட்சிப் பொறுப்பும் தாமே வருமாயின், இந்தப் பளுவை அது நிச்சயமாக ஏற்கும். நாமாக அதிகாரத்தை நாடலாகாது. கோணல் வழிகளில் அடைகிற அதிகாரம் தேசத்துக்கே தீங்கு பயக்கும். ஆனால் நாம் தேடிப் போகாமல், தானாக வருகிற அதிகாரப் பொறுப்பு உத்தமமானது. அறிவு போதனை என்ற இலட்சியத்தில் சுதந்திரக் கட்சிக்காரர்கள் தளராமல் பணிபுரிவராயின், உரிய காலத்தில் நாம் தேடிப் போகாமல் தானாகவே அதிகாரப் பொறுப்பு வரும். நாம் அதிகாரத்துக்கு வரவேண்டும் என்ற இலட்சியத்தைக் காட்டினாலொழிய சுதந்திரக் கட்சியின் அடித்தளத்தை விரிவுபடுத்த முடியாது என்று ஒரு தொண்டர் என்னிடம் கூறினார். எனவேதான் இவ்விஷயத்தில் என் கருத்தைத் தெளிவுபடுத்த விரும்பி இதை எழுதுகிறேன்: அதாவது நாமாக அதிகாரத்தை நாடாவிடினும், தானாக வருகிற அதிகாரப் பொறுப்பை ஏற்பதற்கு நாம் தயங்கவில்லை.

அதிகாரத்தையே இலட்சியமாகக் கொண்ட கட்சிகள் பெறுகிற அதிகாரம் வெறும் தவிட்டுக்குச் சமானமே. ஆனால் சமர்ப்பண உணர்வுடன் செய்த பணிக்குப் பரிசாகக் கிடைக்கும் அதிகாரமோ, தொடர்ந்து சேவை செய்வதற்கு ஒரு பொன்னான வாய்ப்பாகிறது.

★

கணவன் மனைவிக்கிடையே பதினைந்து வருஷங்களுக்கு அதிகமாக வயது வித்தியாசம் இருப்பதைத் தடை செய்கிறது ஸ்ரீ ஆர். பி. கைத்தானின் மசோதா. டிக்கென்ஸ் நாவல்களில் மிகுந்த வயது வித்தியாசமுள்ள தம்பதிகளிடையே நிலவும் உன்னதமான அன்பைப் படிக்கும்போதே அந்தக் கதைக்கு நிறைவு ஏற்படுவதை உணர்ந்திருக்கிறேன். வயது வித்தியாசத்துக்குச் சட்டம் போடுவது, சட்டசபை மெஜாரிட்டியைக் கொண்டு இல்லற வாழ்வின் இன்பத்தை ஒழுங்குபடுத்திவிடலாம் என்று நினைத்துச் செய்கிற முயற்சியே ஆகும். இந்தத் தவறான அபிப்பிராயத்தில் எழுந்துள்ள யோசனையைக் கைவிட வேண்டும்.

தேசம் பலவிதங்களில் பேராபத்தான நிலையில் உள்ள போது, இது போன்ற சம்பந்தமில்லாத விஷயங்களில் நமது சட்டசபையாளர்கள் தங்கள் சக்தியைச் செலவழிப்பது விந்தை. திருமணம் என்பது அவரவர்களின் சொந்த விஷயம். அதில் சர்க்காரின் தலையீட்டுக்கு இடமே இல்லை. இன்று நாம் எத்தனையோ பிரச்னைகளைச் சிந்தித்து, செயலெடுத்தாக வேண்டியிருக்கிறது. அவற்றிலிருந்து தப்பித்துக் கொள்வது போன்ற பிரமையில் எழுந்த நடவடிக்கையே ஸ்ரீ கைத்தானின் முயற்சி. திருமணத்தை அதில் சம்பந்தப்பட்டவர்களின் விவேகத்துக்கே விட்டு வைப்போம். தங்கள் முடிவின் பலனை முற்றிலும் அநுபவிக்கப் போகிறவர்கள் அவர்களே. ஒரு பெண் தன் சம்மதத்தைத் தெரிவிப்பதற்குச் சட்டப்படி குறைந்தபட்ச வயது வரம்பு விதிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு அதிகமாக விவாக விஷயத்தில் சர்க்கார் தலையிடுவது நியாயமல்ல.

★

மத்திய சர்க்காரின் பதவிகளை ஆங்கிலப் பெயரில் குறித்துவிட்டு, அவற்றின் ஹிந்தி நாமகரணங்களை நகவளைவுக்குள் போட்டுக் கொள்ளலாம் என்று திரு கருணாநிதி ராஜி செய்து கொண்டிருக்கிறார். இந்த ராஜித் திட்டத்தைத் தோல்வி என்றே சொல்லிவிடலாம். நகவளைவுகள் நீண்ட காலம் நிலைத்திருப்பதில்லை. காலக்கிரமத்தில் நக வளைவில் உள்ள ஹிந்திப் பெயர்கள் ஆங்கிலச் சொற்களை அகற்றிவிடும். டில்லி மந்திரி சபை அதன் சர்வதேசிய பாணியை இழக்கும்.

## மேலப்பாலையூரில் மேலான தர்மம்

சோழவள நாட்டில் திருச்சேறை, குடவாயில், திருக்கொள்ளம்பூதூர், (திருக்களம்பூர்), திருஇரும்பூளை (ஆலங்குடி) ஆகிய சிவ க்ஷேத்திரங்களால் நாற்புறமும் சூழப்பட்ட திவ்விய ஸ்தலம் மேலப்பாலையூர் எனப்படும் க்ஷீரிகாபுர க்ஷேத்திரம். இங்கு தேவி விசாலாட்சியுடனும் கணபதி முதலான பரிவார தேவதைகளுடனும் வரப்பிரசாதியான பகவான் ஸ்ரீ விச்வநாதர் ஈசான திக்கில் கோயில் கொண்டு விளங்குகிறார். புராதனமான இந்த சிவாலயம் ஜீர்ணோத்தாரணம் செய்ய வேண்டிய நிலையில் உள்ளது. காஞ்சி ஸ்ரீ காமகோடி பீடாதிபர்களின் அருளாசியுடன் சிவாலயத் திருப்பணி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த சிவதர்மத்தில் அன்பர்கள் ஈடுபட்டு நன்கொடையை அடியிற்காணும் விலாசத்துக்கு அனுப்பி வைத்து உதவ வேணும்: ஸ்ரீ பி. எஸ். ஸ்ரீநிவாசன், பொருளாளர், சிவாலயத் திருப்பணிக் கமிட்டி, மேலப்பாலையூர் தபால், கொடவாசல் வழி, தஞ்சை மாவட்டம்.

# மகுடபதி



அமரர் **கல்கி**

## பதினோராம் அத்தியாயம்

## மலைச் சிறை

மகுடபதியைப் போலீஸ் 'லாக் - அப்' பிற்குள் தள்ளி அடைத்த போது இரவு சுமார் இரண்டு மணி இருக்கும். கிட்டத்தட்ட அதே சமயத்தில், கோயமுத்தூர் நகரின் எல்லையைத் தாண்டி மேட்டுப்பாளையம் போகும் ரஸ்தாவில் ஒரு மோட்டார் வண்டி போய்க் கொண்டிருந்தது. அந்த வண்டியில் பின் ஸீட்டில் தங்கசாமிக் கவுண்டரும் செந்திருவும் இருந்தார்கள். டிரைவருடைய ஆசனத்தில் கார்க்கோடக் கவுண்டர் உட்கார்ந்து வண்டியை ஓட்டிக்கொண்டு போனார்.

செந்திருவுக்கு முன்னமே சுயப் பிரக்ஞை உண்டாகி விட்டது. ஆனாலும், இன்னும் அவள் உள்ளத்தின் பிரமை நீங்கவில்லை. மகுடபதி சோபாவின் காலில் கட்டுண்டு கிடப்பதும், கார்க்கோடக் கவுண்டர் கத்தியை ஓங்குவதும், பெரியண்ணன் குறுக்கே பாய்வதும், கத்தி அவன் மார்பில் பதிவதும், பெரியண்ணன் கீழே விழுவதுமான காட்சிகள் திரும்பத் திரும்ப அவள் மனக் கண் முன் வந்து கொண்டிருந்தன. வேறு விஷயங்களில் அவள் மனம் செல்ல மறுத்தது. கத்திக் குத்து, அரிவாள் வெட்டு முதலியவைகளைக் குறித்துப் பேசுவதை அவள் சர்வ சாதாரணமாய்க் கேட்டிருக்கிறாள். ஆனால் இம்மாதிரிச் சம்பவம் எதையும் அவள் இதுவரைக்கும் பார்த்தது கிடையாது. ஆகையால்தான் அந்தப் பயங்கரக் காட்சி அவள் மனத்தில் அவ்வளவு ஆழமாய்ப் பதிந்து விட்டது. கார்க்கோடக் கவுண்டர் கத்தியை ஓங்குவது நினைவில் வரும் போது, அவள் கண்களை இறுக்கி மூடிக் கொள்வாள். உடம்பு வெட வெடவென்று நடுங்கும். பெரியண்ணன் மார்பில் குத்திய கத்தி, உண்மையில் தன்னுடைய மார்பில் பாய்ந்து விட்டதாக அவளுக்குச் சில சமயம் தோன்றும். கத்தி பாய்ந்த இடத்தில் வலிப்பது போலவும் இருக்கும்.

காரில் வேகமாய்ச் சென்ற போது, இரவு நேரத்தின் குளிர்ந்த காற்று விர்ரென்று அவளுடைய முகத்தில் அடிக்கத் தொடங்கியது. இதனால் சிறிது சிறிதாக அவளுக்குச் சிந்திக்கும் சக்தி ஏற்பட்டது. தான் காரில் போவதும், தன் பக்கத்தில் தங்கசாமிக் கவுண்டர் உட்கார்ந்திருப்பதும் மெதுவாக மனத்தில் வந்தன. கார் எங்கே போகிறது என்ற கேள்வி எழுந்தது. சுற்றுமுற்றும் சாலையைப் பார்த்தாள். இருட்டாயிருந்தாலும், அது மேட்டுப் பாளையம் போகிற சாலையென்று ஒருவாறு தெரிந்தது. தன்னைச் சிங்கமேட்டுக்குத்தான் கொண்டு போகிறார்கள் என்று எண்ணிக் கொண்டாள்.

அப்புறம் கொஞ்சங் கொஞ்சமாக அன்று காலையிலிருந்து நடந்த சம்பவங்கள் நினைவுக்கு வந்தன. அவையெல்லாம் உண்மையாக நடந்தவைதானா என்று அடிக்கடி சந்தேகம் உண்டாயிற்று. அந்த வீட்டில், தான் மூர்ச்சையடைந்து விழுந்த பிறகு என்ன நடந்திருக்கும்? பெரியண்ணன் செத்துப் போனவன்தானா? ஒருவேளை பிழைத்திருப்பானா? — ஐயோ! பாவிகள் அந்த அழகிய வாலிபரையும்...

இச்சமயத்தில் ஏதோ மங்கிய கனவில் கேட்டது போல், பின்வரும் பேச்சு வார்த்தைகள் அவள் நினைவுக்கு வந்தன.

"பையனை என்ன செய்திருக்கிறீர்கள்?"

''செய்கிறது என்ன? சோபாவின் காலோடுதான் கட்டியிருக்கிறதே? பத்திரமாயிருக்கிறான். பையனை ஒரு மாதத்துக்குள் தூக்குமேடைக்கு அனுப்பாமற் போனால் நான் கள்ளிப்பட்டி சென்னிமுத்துக் கவுண்டன் மகன் அல்ல....''

''பையன் நடந்ததையெல்லாம் சொல்லி விட்டால்?....''

''நாம் சொல்வதை நம்புவார்களா, அவன் சொல்வதை நம்புவார்களா?''

''இந்தப் பெண் சாட்சி சொன்னால்?''

''சீ! பைத்தியமே? இவளுக்குக்கூடப் பயப்படுகிறாயா? இனி மேல் இவளை யார் வெளியில் விடப் போகிறார்கள்? நம்மை மீறிச் சாட்சி சொல்லி விடுவாளா?''

''போலீஸ் உளவு விசாரித்தால்...?''

''போலீஸ், போலீஸ் என்று அடித்துக் கொள்ளாதே. போலீஸெல்லாம் என் கைக்குள் என்று தெரியாதா? நீ பேசாமலிரு. நான் எல்லாம் பார்த்துக் கொள்கிறேன்.''



இவ்விதம் தன் சித்தப்பாவின் குரலும் கள்ளிப்பட்டிக் கவுண்டருடைய குரலும் பேசிக் கொண்டது அவனுக்கு இலேசாக நினைவு வந்தது. அவர்கள் எங்கே இவ்விதம் பேசினார்கள்? தான் எங்கே இருந்து அந்தப் பேச்சைக் கேட்டது? — செந்திரு கண்களை இறுக்கி மூடிக் கொண்டு யோசனை செய்தான். அனுமந்தராயன் தெரு வீட்டிலிருந்து தன்னை வேறொரு வீட்டில் கொண்டு போய்ப் போட்டதும், அங்கே ஒரு கட்டிலில் தான் கொஞ்ச நேரம் கிடந்ததும் — பூர்வ ஜன்மத்து ஞாபகம் போல் நினைவுக்கு வந்தன. அந்த வீட்டில், தான் கட்டிலில் படுத்துக் கிடந்தபோதுதான் தனக்கு உணர்வு வந்துவிட்டது என்பதை அறியாமல் அவர்கள் அவ்விதம் பேசிக் கொண்டிருந்திருக்க வேண்டும்.

அந்தச் சம்பாஷணையை — துண்டு துண்டாகவும் விட்டு விட்டும் நினைவு வந்த அந்தச் சம்பாஷணையை—செந்திரு அடிக்கடி சிந்தனை செய்தான். அதனுடைய கருத்து இன்னதென்பதை அவன் அறிந்துகொள்ளக் கொஞ்ச நேரம் பிடித்தது. விஷயம் இன்னதென்று தெரிந்தபோது அவனுக்கு உண்டான பயத்துக்கும், ஆத்திரத்துக்கும் அளவே இல்லை.

பெரியண்ணனைக் கொன்றதாக அந்தக் காந்திக் குல்லாக்காரர் மேல் கொலைக் குற்றம் சாட்டப் போகிறார்கள்! அந்தக் குற்றத்துக்காக அவரைத் தூக்கில் போடப் போகிறார்கள்!— ஆகா, எப்பேர்ப்பட்ட பாதகம்! என்ன பயங்கரமான அக்கிரமம்!

இதை நினைக்க நினைக்க, செந்திருவின் அறிவு விரைவாகத் தெளிந்து வந்தது. அந்த அக்கிரமத்தைத் தவிர்க்கக் கூடியவள் தான் ஒருத்திதான் என்பதை அவள் உணர்ந்தாள். பெரியண்ணன் இன்னொருவர் கையினால் குத்துப்பட்டதை அவள் கண்ணால் பார்த்திருக்கிறான். கோர்ட்டில் மட்டும் அவள் போய்ச் சாட்சி சொன்னால், நிச்சயமாக அந்தக் காந்தி மனுஷருக்குத் தண்டனை விதிக்க மாட்டார்கள். இதை எப்படியாவது தான் நிறைவேற்ற வேண்டும் என்று அவள் பல்லைக் கடித்துக் கொண்டு தீர்மானித்தாள். அதற்கு எத்தனையோ காரணங்கள் இருந்தன. பெரியண்ணன் தன் பேரில் அன்பு வைத்த காரணத்தினால் குத்திக் கொல்லப்பட்டான்; அவனுக்காகப் பழிக்குப் பழி வாங்க வேண்டும். அந்த வாலிபர் தன்னால் இந்தப் பெரிய அபாயத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறார். ஓர் எறும்பைக்கூடக் கொல்லத் தயங்கக்கூடிய அந்தக் காந்தி மனுஷர், தன்னால் இப்போது கொலைக் குற்றம் சுமத்தப்பட்டிருக்கிறார். அவரை எப்படியாவது விடுவிக்க வேண்டும். கார்கோடக் கவுண்டரைத் தான் மணந்து கொள்வதென்பது — அதுவும் அன்று இராத்திரிக்குப் பிறகு - ஒரு நாளும் இயலாத காரி





மயிலை தீபன் ஆர்ட்ஸ் சங்கத்தின் ஆதரவில் சென்ற 31-5-71ல் நடைபெற்ற குமாரி கே. ரமாவின் பரத நாட்டியம் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் அமர்ந்து பார்க்கும் வண்ணம் இருந்தது என்பதே அதற்குப் போதிய விமர்சனமாகும். ஸ்ரீமதி கே. எஸ். ராஜத்தின் நட்டுவாங்கமும், கே. எஸ். லக்ஷ்மியின் பின்னணிப் பாட்டும் நிகழ்ச்சிக்குக் கலை ஊட்டியதுடன், பாடப்பட்ட எல்லா தமிழ் உருப்படிகளும் காதுக்கு இனிமை தருவதாக இருந்தன. குறத்தி நடனமும், கமாஸ் தில்லானாவும் நிகழ்ச்சிக்கு வேகமளித்தன. தொடர்ந்து அப்பியாசம் செய்து வரின் குமாரி ரமாவின் நாட்டியத்தின் கலை அம்சம் அபிவிருத்தியடைய வாய்ப்பு காணப்படுகிறது.

---

யம். அந்தப் பாவி — கொலைகாரன் — இன்னும் இந்த உலகத்தில் இருந்தால் என்னென்ன துர்க்கிருத்தியங்கள் செய்வானோ! — அந்த அழகிய வாலிபரை அல்லவா இவன் தூக்கு மேடையில் பார்ப்பதாகச் சொன்னான்? அதற்குப் பதிலாக இவனைத் தூக்குமேடைக்கு அனுப்புவது தன்னுடைய காரியம்.

கார்க்கோடக் கவுண்டரைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி, கடைசியில் நிர்ப்பந்தம் ஏற்பட்டால், தன் காதில் இருந்த வைரத் தோட்டை உடைத்துப் பொடி பண்ணிச் சாப்பிட்டு உயிரை விட்டு விடுவதென்று ஏற்கனவே செந்திரு தீர்மானித்திருந்தாள். இப்போது அந்த எண்ணத்தை அவள் கைவிட்டாள். தன் உயிரை எப்படியாவது கெட்டியாகக் காப்பாற்றிக் கொள்வது அவசியம். அப்போதுதான் பெரியண்ணனுடைய அநியாயக் கொலைக்குப் பழி வாங்க முடியும்; அந்த வாலிபரின் உயிரையும் காப்பாற்ற முடியும்.

இப்படி அவள் எண்ணிக் கொண்டிருந்த போது. சாலையின் ஒருபுறத்தில் சிங்கமேட்டு ஓடையும், வீடும் தெரிந்தன. வெண்ணிலாவில் ஓடை நீர் வெள்ளி மயமாய்ப் பிரகாசித்தது. அந்த ஓடைக் கரையில், முதன் முதலில் மருடபதியைத் தான் சந்தித்ததை நினைத்த போது, அவளுக்கு மயிர்க்கூச்செறிந்தது. மூன்று வருஷங்களாகத் தன்னைச் சிறை வைத்திருந்த வீட்டுக்கே மறுபடியும் போகிறோம் என்ற எண்ணம் அவளை என்னமோ செய்தது. முதல் நாள் காலையில் அங்கிருந்து ஒருவரும் அறியாமல் கிழவனுடன் கிளம்பிய போது தனக்கு விடுதலை கிடைத்து விட்டதாக எண்ணியது எவ்வளவு பிசகாய்ப் போயிற்று? தான் நினைத்ததென்ன? நடப்பதென்ன? மறுபடியும், அன்று இராத்திரியே அந்த ஜெயிலுக்குத் திரும்பி வருவோமென்று.....

ஆனால், இதென்ன? வண்டி சிங்கமேட்டுக் குறுக்குப் பாதையில் திரும்பாமல் நேரே போகிறதே? டிரைவர் ஒரு வேளை தெரியாமல் விட்டுக் கொண்டு போகிறானோ? சித்தப்பாவைக் கேட்கலாமென்று செந்திரு வாய் எடுத்தாள். அதே சமயத்தில் தங்கசாமிக் கவுண்டர், ''அண்ணே! நன்றாக யோசனை செய்து விட்டீர்களா? நேரே போக வேண்டியதுதானே?'' என்றார்.

''தம்பி! நீ என்னத்துக்கு வீணாகக் கவலைப்படுகிறாய்? யோசனை செய்கிற விஷயத்தையெல்லாம் என்னிடம் விட்டு விடு'' என்ற கார்க்கோடக் கவுண்டரின் குரலைக் கேட்டதும், செந்திரு தேள் கொட்டியவளைப் போல் துடித்தாள். வண்டியை ஓட்டிக் கொண்டு வந்தது கள்ளிப்பட்டிக் கவுண்டர்தான் என்பதை இது வரைக்கும் அவள் கவனிக்கவில்லை. அந்தக் கொலைகார மனுஷருடன் ஒரே வண்டியில் போகிறோம் என்னும் எண்ணம் அவளுக்கு எவ்வளவோ துன்பத்தை உண்டாக்கிற்று. ஓடும் வண்டியிலிருந்து கீழே குதித்து விடலாமா என்று ஒரு கணம் எண்ணினாள். தன்னுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்னும் பழைய உறுதியை எண்ணிப் பல்லைக் கடித்துக் கொண்டாள். கள்ளிப்பட்டிக் கவுண்டரும் கூட இருப்பதால், ரொம்ப ஜாக்கிரதையாய் நடந்து கொள்ள வேண்டுமென்றும் தீர்மானித்தாள்.

மோட்டார் வண்டி மேட்டுப்பாளையத்தைத் தாண்டி மேலே சென்றது. நீலகிரி மலையின் அடிவாரத்தை அடைந்தது. மலைப் பாதையில் ஏறிப் போகத் தொடங்கியது.

அப்போது செந்திரு. ''ஓகோ! கூனூர் பங்களாவில் நம்மை விடப் போகிறார்கள்'' என்று நினைத்தாள்.



### உணவு விடுதிப் பிரமுகர்

புகழ்பெற்ற விளையாட்டு விமர்சகரும், 'தாஸப் பிரகாஷ்' உணவு விடுதியின் மானேஜருமான ஸ்ரீ பி. ஆனந்த ராவ் அவர்கள் ''லண்டன் ஹோட்டல் அண்ட் காடரிங்'' நிலையத்தின் கௌரவ அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். ஆசியாவில் இந்தக் கௌரவத்தைப் பெறும் முதல் மனிதர் ஸ்ரீ ஆனந்த ராவ் அவர்களே என்றறிந்து மகிழ்கிறோம். அவருக்கு நல்வாழ்த்துக்கள்.

### இசைத்தட்டு விற்பன்னர்

கிராமபோன் கம்பெனியின் மூலதனத்தில் இந்திய மக்களும் பங்குகொள்ளும் வாய்ப்பை அளித்து இந்த ஸ்தாபனத்தை விரிவாக்கி, இந்திய கலைஞர்களுக்கெல்லாம் புதிய உற்சாகத்தை அளித்தவர் திரு பாஸ்கர மேனன். லண்டன் மாநகர கிராமபோன் கம்பெனியுடன் இணைந்து அமெரிக்காவில் செயல் புரியும் காபிடல் இசைத்தட்டு கம்பெனியின் தலைவராக இவர் பதவி உயர்வு பெற்றுள்ளார். தொழில் நிர்வாகத் திறமையை வியத்தகு அளவில் பெற்றுள்ள திரு பாஸ்கர மேனனை வாழ்த்துகிறோம்.



இதனால் ஒரு குதூகலமே உண்டாயிற்று. அவளுடைய தகப்பனார் இருந்த காலத்தில் அவர்கள் கோடைக்குக் கூனூருக்கு வருவது உண்டு. கூனூரில் அவர்களுக்குச் சொந்தப் பங்களா இருந்தது. பங்களாவுக்குப் பக்கத்தில் தபாலாபீஸ் உண்டு என்பது அவளுக்கு நினைவு வந்தது. பங்களாவில் இருந்த வேலைக்காரன்கூட அவளுடைய மனக் கண் முன் வந்தான். பங்கஜத்துக்கும் அவளுடைய தகப்பனாருக்கும் எம்மாதிரிக் கடிதம் எழுதுவது, வேலைக்காரனைச் சரிப்படுத்தி எப்படித் தபாலாபீஸில் போடச் சொல்லுவது என்றெல்லாம் யோசனை செய்யத்தொடங்கினாள். இந்த யோசனையிலேயே கண்ணயர்ந்து விட்டாள்.

தூக்கத்தில் என்னவெல்லாமோ பயங்கரமான கனவுகள் கண்டு பதறிச் செந்திரு கண் விழித்த போது, பலபலவென்று பொழுது விடிந்திருப்பதையும், வண்டி மலையின் மேலே ஒரு மேட்டுப் பங்களாவின் வாசலில் நிற்பதையும் கண்டாள். அது அவர்களுடைய கூனூர் பங்களா இல்லை. சுற்றிலும் வெகுதூரத்துக்கு மனித வாசஸ்தலமே காணப்படவில்லை. நாலாபுறமும் செங்குத்தாக வளர்ந்த யுகலிப்டஸ் மரங்கள்தான் காணப்பட்டன.

தங்கசாமிக் கவுண்டர் கீழே இறங்கிச் செந்திருவைப் பார்த்து, ''இறங்கு, கீழே !'' என்றார். செந்திரு கீழே இறங்கினாள்.

''போ, உள்ளே!'' என்று உத்தரவு பிறந்தது.

செந்திருவுக்கு அந்தச் சூனியமான பங்களாவில் புகுவதற்குத் தைரியம் வரவில்லை. குளிரினாலும் பீதியினாலும் நடுங்கிக் கொண்டே, '' சித்தப்பா ! என்னை எங்கே அழைத்து வந்திருக்கிறாய்? நான் இந்த வீட்டுக்குள் போக மாட்டேன். சிங்கமேட்டுக்கு என்னை அழைத்துக் கொண்டு போ! இல்லாவிட்டால்....'' என்று இழுத்தாள்.

''தங்கசாமி! அந்தத் தறிதலையைப் பேச விட்டு விட்டுப் பேசாமல் நிற்கிறாயே ? இழுத்துக் கொண்டு போய் உள்ளே விடு !'' என்று கள்ளிப்பட்டியார் கர்ச்சித்தார்.

தங்கசாமிக் கவுண்டர் செந்திருவின் கையைப் பற்றிய போது அவள் திமிறினாள். அப்போது கள்ளிப்பட்டிக் கவுண்டர் அங்கு வந்து, தம் இரும்புக் கைகளினால் செந்திருவைப் பற்றினார். கரகரவென்று இழுத்துக் கொண்டு போய், பங்களாவுக்குள் புகுந்து, ஓர் அறையில் அவளைத் தள்ளி வெளியே கதவை இழுத்துச் சாத்திக் கதவில் நாதாங்கியை மாட்டினார். கீழே விழுந்த செந்திரு பரபரப்புடன் எழுந்து வந்து, கதவைப் படீர் படீர் என்று அடித்தாள். (தொடரும்)




# கர்ப்பகிருகமும் காராகிருகமும்

❀ சிவம் சந்திரசேகரன் ❀

**1928**ல் ஸ்ரீ காமகோடி பெரியவாள் தமது கேரள திக்விஜயத்தில் திருச்சூருக்கு விஜயம் செய்தார்கள்.

ஆதிசங்கர பகவத்பாதர்களுடன் நெருங்கிய தொடர்புள்ள திருத்தலம் திருச்சூர். ஆதிசங்கரரின் பெற்றோர்கள் இங்கு எழுந்தருளும் வடக்கு நாதன் எனப்படும் விருஷாசலேசவரருக்கு நோன்பிருந்து தான் சங்கரரைப் புத்திரராகப் பெற்றனர்.

வடக்குநாதன் ஆலயம் ஆசார சீலங்களுக்கு உறைவிடமாகும். அங்கு இறைவனைப் பூஜிக்கும் நம்பூதிரிகள் மிகக் கடுமையான நியமத்துடன் இருந்தாக வேண்டும். உபநயனமானதும் அவர்கள் பூஜா நிலை பெறுகிறார்கள். முறை போட்டுக் கொண்டு பூஜை செய்கிறார்கள். முறைக்காலம் முழுவதும் குறிப்பிட்ட பூஜகர் ஆலய எல்லைக்குள்ளேயே இருந்தாக வேண்டும். அச்சமயங்களில் அவர்களுக்குப் பிரம்மசரியம் கண்டிப்பாக விதிக்கப்பட்டிருப்பதால் அவர்கள் வீட்டுக்குச் செல்லக் கூடாது.

பெரியவாள் திருச்சூருக்குச் சென்றிருந்த போது இவ்விதம் ஆலயத்துக்குள்ளேயே கட்டுப்பட்டிருந்தார் ஒரு நம்பூதிரி. பெரியவாள் கோயிலுக்குச் சென்றிருக்கையில், இவர் கர்ப்பகிருகத்தில் இல்லாமற் போக நேரிட்டது. தாம் ஆலயச் சூழலை விட்டுப் போகாமலிருந்தும், ஸ்வாமி சந்நிதிக்கு வந்த ஆசாரியாளைத் தரிசிக்கத் தமக்குக் கொடுத்து வைக்கவில்லையே என்று அவருக்கு மிகுந்த துக்கமும், ஏமாற்றமும் ஏற்பட்டன.

ஸ்ரீ பெரியவாளுக்கு இது தெரிந்தது.

அன்று சிவராத்திரி. சிவராத்திரியில் இரவு நாலு யாமங்களும் பெரியவாள் செய்யும் பூஜையின் பெருமையைச் சொல்லி முடியாது. சாதாரணமாக, விடிய விடிய நாலாவது யாம பூஜையை முடித்துவிட்டு, அருகே உள்ள சிவாலயத்துக்குச் சென்று வழிபடுவது பெரியவாளின் வழக்கம்.

ஆனால் திருச்சூர் சிவராத்திரியின் போதோ, தமக்காக ஏங்கும் நம்பூதிரியை அதிகம் காக்க வைக்க வேண்டாம் என்று கருதியோ என்னவோ, அர்த்த ஜாமத்திலேயே ஆலயத்துக்குத் தரிசனம் செய்யச் சென்று விட்டார்கள்!

நம்பூதிரியின் ஆனந்தத்தை என்னென்பது? சிவராத்திரியில் அர்த்தஜாமத்தில்தான் லிங்கமூர்த்தி ஆவிர்பவித்ததாகச் சொல்வார்கள். பேசாத வடக்குநாத லிங்கமூர்த்தியோடு கூடப் பேசுகிற ஆசாரிய லிங்கமூர்த்தியையும் சேர்த்துத் தரிசித்ததில் நம்பூதிரி பேருவகை கொண்டார்.

சிவஸ்வரூபமான ஸ்ரீமத் ஆசாரியாளோ, தம்மை ஒருபுறம் பக்தராக வைத்துக் கொண்டு ஸ்வாமி தரிசனம் செய்கிறார்; மற்றொரு புறம் தம்மிடம் பக்தி கொண்ட நம்பூதிரிக்குத் தரிசனம் தந்து அவரது அபிலாஷையைப் பூர்த்தி செய்கிறார்.

* * *

கர்ப்பகிருகத்தில் அடைபட்ட நம்பூதிரியிடமிருந்து காராகிருகத்தில் அடைபட்டிருந்த தேசபக்தர்களிடம் வருவோம்.

1935 அக்டோபரில் ஸ்ரீ பெரியவாள் வங்காளத்திலுள்ள மிதுனபுரிக்கு (மிட்னபூருக்கு) விஜயம் செய்தார்கள். சுதந்திரப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டுக் கைதானவர்கள் மிதுனபுரியில் சிறை வைக்கப்பட்டிருந்தனர். அவர்களைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் மிகுந்த கண்டிப்புடன் கண்காணித்து வந்தனர்.

இந்தச் சிறைக் கைதிகளில் சிலர் ஸ்ரீ பெரியவாள் தங்கள் ஊரில் முகாமிட்டிருப்பதை அறிந்தனர். அவரைத் தரிசிக்க ஆவல் கொண்டனர். தங்கள் விருப்பத்தை, ஆங்கி

வேயரான சிறை அதிகாரியிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். அந்த அதிகாரியும் அவர்களது மத உணர்வை மதித்தார்.

மாலை ஐந்து மணியிலிருந்து ஆறு மணிக்குள் அவர்கள் பெரியவாளைத் தரிசித்து வர அநுமதியளித்தார். அவர்களைக் கண்காணிக்க துப்பாக்கி வீரர்களையும் உடன் அனுப்பி வைத்தார். ஆறு மணிக்குச் சிறிதளவு தாண்டினாலும் காவலாளிகளின் துப்பாக்கிக் குண்டுகள் அவர்கள் மீது பாய்ந்து விடும் என்ற எச்சரிக்கையும் விடுத்தார்..

ஐந்து மணிக்குச் சிறைச்சாலையிலிருந்து காவலுடன் புறப்பட்ட அரசியல் கைதிகள் ஸ்ரீ மடத்தின் முகாமை அடையும் போதே ஐந்தேகால் மணிக்கு மேலாகிவிட்டது. அன்று பெரியவாள் பூஜை முடிக்கும் போது கிட்டத்தட்ட ஐந்து மணி ஆகிவிட்டது. வெகு நீண்ட பூஜைக்குப்பின் அப்போதுதான் அவர்கள் தனிமையில் சிறிது சிரம பரிகாரம் செய்து கொள்ளச் சென்றிருந்தார்கள்.

எனவே, மடத்துச் சிப்பந்திகள் அச்சமயத்தில் பெரியவாளின் ஓய்வைக் கலைக்க விரும்பவில்லை.

மிதுனபுரி அரசியல் கைதிகள் அதிதீவிர புரட்சிவாதிகள். அதனால்தான் அவர்களுக்கு அத்தனை காவலும் கட்டுப்பாடும் போடப்பட்டிருந்தது. அதிலும் பெரியவாளைக் காண வந்தோரில் பெரும்பாலோர் இளைஞரானபடியால் அவர்களுக்கு வேகம் அதிகம். அப்படியிருந்தும் அவர்களது பக்தியின் குழைவைப் பாருங்கள்! ''ஜகத்குருஜியைச் சிரமப்படுத்த வேண்டாம். நாங்கள் இன்னும் சிறிது நேரம் இங்கு காத்திருக்கிறோம். அதற்குள் அவர்கள் தாமாகவே வந்தால் போதும்'' என்று கூறிவிட்டனர்.

தயாதாட்சிண்யம் இல்லாமல் கடிகாரம் ஓடிக் கொண்டேயிருந்தது. கால் மணி ஆயிற்று: அரை மணியும் ஆயிற்று.

ஆறு மணி அடிக்க இன்னும் ஏழே நிமிஷம் பாக்கி. அவர்கள் ஓட்டமும் நடையுமாகச் சென்றால்தான் சிறையை அடைய முடியும்.

மிகுந்த ஏமாற்றத்துடன் காவல் கைதிகள் புறப்பட்டனர். ''ஆறு மணி தாண்டிவிட்டால் துப்பாக்கிக் குண்டு எங்கள் மேல் பாய்ந்துவிடும். உயிர் போவதைப் பற்றிக் கவலையில்லை. ஆனால் இந்த ஜன்மாவில் ஜகத்குருஜியைத் தரிசிக்காமல் சாக விருப்பமில்லை. எனவே, இப்போது அவர்களைக் காணாமலே போகிறோம் — என்றேனும் ஒரு நாள் இந்தப் பிறவியிலேயே அந்தப் பாக்கியம் கிடைக்கலாம் என்ற நம்பிக்கையில்'' என்று அவர்களில் ஒருவர் மனம் கசிந்து கூறினார்.

சிறைச்சாலையை நோக்கி அவர்கள் சிறிது தூரம் சென்று கொண்டிருக்கும் போது, பெரியவாள் உள்ளேயிருந்து தாமே வெளி வந்து விட்டார்கள்.

''தரிசனத்துக்கு யாராவது காத்துக் கொண்டிருக்கிறார்களா?'' என்று அருகே இருந்த மடத்து அதிகாரியிடம் வினவினார்.

காவல் கைதிகள் வந்திருந்து மிகுந்த ஆதங்கத்துடன் திரும்பியதை அவர் தெரிவித்தார்.

உடனே பெரியவாள் ஓர் ஆளை ஓடிச் சென்று அவர்களைத் திரும்ப அழைக்குமாறு கூறி, தாமும் அவர்களை நோக்கி நடக்கலானார்.

காவல் கைதிகளின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. சாதாரணமாகத் தரிசித்தால் உண்டாகும் நெகிழ்ச்சியைவிட இந்த அசாதாரணச் சந்திப்பில் அவர்களது பக்தி பெருகி விட்டது.

சிலர் தாங்கள் இருந்த இடத்திலிருந்தே அப்படியப்படியே விழுந்து நமஸ்கரித்தார்கள். வேறு சிலர் பெரியவாள் பக்கம் திரும்பி உயரக் கைகளைத் தூக்கி வணங்கியவாறே சிறைக்கு விரைந்து கொண்டிருந்தனர்.

''நமஸ்தே! நமஸ்தே! தங்கள் தரிசனம் கிடைத்தது எங்கள் பாக்கியம். அநுக்கிரஹம் புரியுங்கள்! தங்கள் அநுக்கிரஹத்தால் தேசம் சுதந்திரம் பெற வேண்டும்'' என்று கூவிக் கொண்டே அக்கைதிகள் அதி விரைவாகச் சென்றனர்.

தேச நலனைத் தவிர வேறெதுவும் கோராமல் ஓடும் அந்தக் கைதிகளைப் பார்த்துக் கொண்டு ஆடாமல் அசையாமல் நின்று கொண்டிருந்தார் குருமூர்த்தி.

வெகுதூரம் சென்றபின் அவர்கள் திசை மாறுமுன், மீண்டும் பெரியவாளின் பக்கம் ஏதோ ஓர் ஆசையுடன் திரும்பினர். அந்த ஆசையை முன்பே அறிந்தாற்போல் அருள் வடிவமாக அங்கு நின்று கொண்டிருந்தார் ஸ்ரீ பெரியவாள்.

எட்டத்திலே அத்தனை கைகளும் சிரத்துக்கு மேல் உயர்ந்தன.

பெரியவாளின் அபயஹஸ்தமும் உயர்ந்தது!

— முற்றும் —



 க்ரிஸ்டல் புன்னகையின்
இரகசியம் என்ன?

சொத்தையற்ற
பளிச்சிடும் பற்கள்...
துர்நாற்றமில்லாத
மூச்சுக்காற்று!

க்ரிஸ்டல்
டூத் பேஸ்ட்

ஹெக்ஸா க்ளோரோஃபீன் • எஸ் எல் எஸ்
• டிஸிபி அடங்கியது.




கொழிக்கும் நுரைவளம், உன்னதமான நறுமணம்.
2 அளவுகளில் கிடைக்கிறது. அலெம்பிக்—ஹோம்ப்ரோ தயாரிப்பு.

everest/sg d/Acw Tam

ஆனூர் திருலோக சீதாராம் அவர்கள் பத்திரிகைத் தொழிலில் இறங்கிய ஆரம்ப காலம். பத்திரிகை நடத்துவது என்றால் செலவுகளுக்குக் கேட்க வேண்டுமா என்ன? கவிஞர் இக்கட்டான நிலைமைகளை எப்படிச் சமாளித்தார்? இதனைக் கவிஞரே கூறக் கேட்போம்:

''வீட்டில் உள்ள தட்டுமுட்டுச் சாமான்களையும் மார்வாடிக் கடையில் அடைக்கலமாக்குவது வழக்கம். அடிக்கடி தாய் வீட்டுக்கு வரும் என் சகோதரியின் நகை நட்டுக்களும் இதற்கு விலக்கில்லை. ஒவ்வொரு தடவையும் அவளது கணவன் வந்து நகைகளைத் தாமே மீட்டுக்கொண்டு, மனைவியையும் அழைத்துப் போவார். பின்னால் தொழில் சீர்பட்டு

## வாடகைக்குத் தங்கை வாய்ப்பதுண்டோ?

விட்ட நாளில், திடீரென்று சகோதரி காலமாகி விட்டாள்...''

பத்திரிகைச் சந்தையிலே
பலகையொன்று போட்டெனது
சித்திரத்தை விலைகூறச்
செலவறியா நாளையிலே
சீர்செய்து சிறப்பளித்துச்
செல்வத்திற் சேர்க்காத
பேர்பெற்ற தாய்வீட்டில்
பெண் பெருமாள் வந்திருந்தாள்
காற்சிலம்பும் கைவளையும்
காதோலை கல்வளர்க்கப்
போற்றியளித்தும் பின்
பூசித்துப் போயிருந்தாள்

தோற்றதெல்லாம் மீட்டுத்
தொழிலெல்லாம் செப்பனிட்டு
மாற்றியமைத் ததெல்லாம்
மகிழ்ந்திடுநாள் கணக்கிட்டு
நோற்றிருந்தேன் நான்வருமுன்
நேற்றேபுப்போல் மறைந்தாள்
வரும்போது முன்வந்தேன்
வழியில் நான் பின்னடைந்தேன்
ஏடெழுதி எம்துயரை
எத்திசையும் எக்களித்தும்
வாடகைக்குத் தங்கையொன்று
வையகத்தில் வாய்ப்பதுண்டோ?

திருச்சி வானொலியில் பேசுவதற்காகக் கவிஞர் விண்ணப்பித்திருந்தார். 'ஆடிஷன்' பார்க்க வரச் சொன்னார்களாம். அவர் குரல் 'மைக்'குக்குப் பொருந்தவில்லையென்று தெரிவித்து விட்டார்கள். 1944-ஆம் ஆண்டில் அவர்க



ளாகவே ஒரு கவியரங்குக்கு வருமாறு கவிஞருக்கு அழைப்பு அனுப்பியிருந்தார்கள். முன்பு பொருத்தமில்லாமல் போன குரல் இப்பொழுது மட்டும் பொருந்துமென்று அவர்கள் எப்படி முடிவு செய்தார்கள்?

ஒரு 'கவிதைக் கடிதம்' அனுப்பினார்.

உயிர்க் குரல்தான் ஏறலையோ
உண்மையும் அன்று அதுவேயோ
உயிரற்ற மைக்கின்முன்
ஊமையென்று கூறிவிட்டீர்!
என்குரல் அன்று எடுக்கவில்லை
என்றதொரு பேச்சினிலே
முன்செய்த வினையென்ற
முடிவுடனே திரும்பிவிட்டேன்!
மீண்டும் என் முழக்குரலின்
முன்னோட்டம் பேச்சிற்கு
வேண்டுமெனில் கூறுங்கள்
வருகின்றேன் மைக்கின்முன்!
யாருமற்ற தனிமையிலே
யான் இதனைக் கேட்கின்றேன்
நேரான பேச்சினிலே
நிற்கட்டா? போகட்டா?

இந்தக் கவிதைக் கடிதத்தைக் கண்ட, அப்பொழுது திருச்சி வானொலியில் உதவி இயக்குநராக இருந்த திரு கே. பி. ரங்காச்சாரி, ''உங்களை மறுக்காமல் அப்பொழுதே ஏற்றுக் கொண்டிருந்தால் இப்படி ஒரு கவிதை கிடைத்திருக்குமா?'' என்று கூறிச் சமாளித்துக்கொண்டாராம்.

சு. து. சு. யோகியாருக்குச் சென்னையில் ஒரு பாராட்டு விழா. திருச்சியிலிருந்து கவிஞரை வரவழைத்து, பேசும்படி அமைப்பாளர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். விழா முடிந்து திரும்பும்போது அமைப்பாளர்கள் அவருக்கு முன்னரே புறப்பட்டுப் போயிருந்தார்கள்! திரும்பி வர ரயில் செலவுக்கு நண்பர்களிடம் பிரயாண நிதி திரட்ட வேண்டிய நிலை வந்தது, கவிஞருக்கு! அதே வாரம் கவிஞர் எட்டயபுரம் பாரதி விழாவில் கலந்து கொள்ள நேர்ந்தது. சென்னை அனுபவத்தின் அடிப்படையில் 'சந்தையில் கவிதை' என்ற ஒரு பாடலை இயற்றியிருந்தார்.

கற்பனை விட்டுக் கணக்கெழுதப் போடு
நேற்று மாலையில் நீட்டி முழக்கி
கவிஞன் ஒருவனின் கவிதை நடந்தது
கற்பனைச் சிறப்பை வியந்தார் வந்த
கூட்டம் கொஞ்சமா கொண்டவர் யாரும்



உண்டா அந்த கருப்படி அச்சில்
வார்த்தால் அதனை வாங்கிடப் பணத்தை
வழங்குவார் யாரும் வருவரா பிரதிகள்
அன்பளிப்பாக ஆளுக் கொன்றும்
அளித்தால் நன்றே ஆகு என்பர்
வெட்டிப் பிழைப்பு விடிந்தால் நாளை
எட்டயபுரத்தில் எழிலார் சென்னையில்
இன்னும் பற்பல இனிய பள்ளியில்
எந்தமிழ்த் தந்தை இணையிலாக் கவிஞன்
இறந்த நாளை எந்துணை மகிழ்வாக்
கூடித் திருநாள் கொண்டாடுவர் பார்
மந்திரிமாரும் மகராசர்களும்
போனவன்பெருமை புகழ்வார்ப் புகழ
வினான் உனக்கும் வேலை புண்டாங்கே
பாரதி உறங்கும் பனிக்குக் கல்லறை
பக்கத்திலொன்றும் பற்பல ஒன்றில்
முடங்கலாம் நீயும் மூன்றும் நாளில்
எழுந்தும் வரலாம்......

''இதன் பயன், எட்டயபுரம் வந்து போகும் செலவுக்குக் கொஞ்சம் தாராளமாகவே — நூறு ரூபாய் — கொடுத்துவிடும்படி கல்கி ஏற்பாடு செய்தார்'' என்கிறார் கவிஞர்.

பேட்டி: பி. வி. கிரி





# ராமாயணம்

ராஜாஜி

இதற்குள் இந்திரனுடைய தேரை மாதலி யுத்த பூமிக்கு ராமனுக்காகக் கொண்டு வந்து சேர்த்தான்.

''தேவராஜன் தங்களுக்காக அனுப்பியிருக்கிறான். தேரில் ஏறுவீராக! தேவர்களுக்குச் சத்துருவான ராவணனை வதம் செய்வீர்களாக'' என்றான் இந்திரனுடைய சாரதி. ராமனும் ரதத்தை வலம் செய்து நமஸ்கரித்து விட்டு ஏறினான்.

பிறகு அற்புத யுத்தம் நடந்தது. ராவணன் மிகவும் அடிபட்டு மனம் தளர்ந்து மயக்கமாக இருந்தான். இதைக் கண்ட அவன் சாரதி மெதுவாகத் தேரை யுத்த பூமியிலிருந்து வெளியே நடத்திக் கொண்டு போனான்.

கொஞ்ச நேரத்தில் ராவணன் மயக்கம் தெளிந்து, ''ஏன் தேரை யுத்த பூமியை விட்டுக் கொண்டு வந்தாய்?'' என்று சாரதியைக் கோபித்து மறுபடியும் திருப்பச் சொல்லி ராமனுடைய தேர் முன் நின்றான். மறுபடியும் கோர யுத்தம் ஆரம்பித்தது.

அஸ்திரத்துக்குப் பிரதியஸ்திரம் செலுத்திக் கொண்டு இருவரும் அதுவரையில் யாரும் கண்டிராத அற்புத முறையில் ரதங்களைச் செலுத்தி நீண்ட நேரம் யுத்தம் நடத்தினார்கள். சேனையிலிருந்த வீரர்கள் பிரமித்துப் போய் அப்படியே பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

இதைக் கவனித்து வந்த சாரதி மாதலி, ராமனுக்கு மெதுவாகச் சொன்னான்: ''அரக்கனுடைய விநாச காலம் நெருங்கி விட்டது. தாமதித்துக்கொண்டிருப்பது ஏன்? பிரம்மாஸ்திரத்தை மறந்து விட்டீரா?''

இவ்வாறு மாதலி சொன்னதும் ராமன் அந்தத் திவ்வியாஸ்திரத்தை உரிய மந்திரத்தைச் சொல்லிச் செலுத்தி விட்டான். அது வரையில் எத்தனையோ தடவை அரக்கனுடைய தலைகள் அறுபட்டாலும் புதிய தலைகள் முளைத்துக் கொண்டே வந்தன.

பிரம்மாஸ்திரமானது ஜ்வாலை விட்டுக் கொண்டு, ராவணனை நோக்கிச் சென்று, அரக்கனுடைய மார்பைத் துளைத்தது. லங்கேசனுடைய கையிலிருந்த வில் கீழே நழுவி விழுந்தது. அரக்கன் ரதத்திலிருந்து கீழே விழுந்தான். தரையில் உயிரற்றுக் கிடந்தான்.

தேவ துந்துபிகள் முழங்கின. ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது. ராகவனையும், அவனுடைய ரதத்தையும் புஷ்பக் குவியல் மறைத்து விட்டது. லக்ஷ்மணன், விபீஷணன், ஜாம்பவான் முதலிய வீரர்கள் சூழ்ந்து கொண்டு ராமனைப் பூஜித்து ஆனந்தத்தில் மூழ்கினார்கள்.

விபீஷணன் உயிரற்றுக் கிடக்கிற அண்ணனைப் பார்த்து, ''ஹா வீரனே! அற்புத செயல்களைச் செய்தவனே! சகல சாஸ்திரங்களையும் படித்து அறிவு பெற்றவனே! வீர விக்ராந்த விக்யாத விநீதநய கோவிதனே! வீழ்த்தப்பட்டு இன்று இரு புஜங்களையும் நீட்டிப் பரப்பி உயிர் துறந்து தரையில் கிடக்கிறாயே'' என்றான். அண்ணன் மரணத்துக்குத் தானே வேலை செய்தான். ஆனபோதிலும், செத்துக் கிடந்த அண்ணனைப் பார்க்கும் போது அந்தச் சந்தர்ப்பத்தில் சமீபத்தில் நடந்ததெல்லாம் மறந்து போய், 'பழைய வாசனையும், வாழ்க்கையும், நினைவுகளும் தோன்றி ரத்தபாசத்தின் பயனாகத் துக்கம் உண்டானது சகஜம்.

''ஆணவத்தால் மதியிழந்து துராலோசனை சொன்னவர்களால் சூழப்பட்டு நான் சொன்னதை நீ புறக்கணித்

தாய். என்ன வினையும் என்று நான் சொன்னேனே அதுவே நடந்து விட்டது! செய்த பெருந் தவறுகளின் பயனை அடைந்து விட்டாய்! மதம் சொரியும் யானை வீழ்த்தப்பட்டுக் கிடப்பதுபோல் மண்ணில் கிடக்கிறாயே, சூரர்களுக்குள் மகா சூரனாயிருந்த ராக்ஷசேந்திரா!'' என்றான்.

இவ்வாறு துக்கப்பட்டுக் கொண்டிருந்த விபீஷணனைப் பார்த்து ராமன் மெதுவாகப் பேசலானான்.

''மகா வீரனைப்போல் யுத்தம் செய்தான். தன் சௌரியத்தைப் பூரணமாகக் காட்டிவிட்டு உயிர் நீத்தான். இத்தகைய மரணம் மேலான மரணம். இதற்குத் துக்கப்படலாகாது. போரில் புறங் காட்டாமல் இறப்பது வீரர்களுக்கு உண்டாகக் கூடிய முடிவு இல்லையா? வெற்றியோ மரணமோ எதுவாயினும் சரியே என்றல்லவோ வீரர்கள் யுத்தத்தில் இறங்குகிறார்கள். 'வீர சுவர்க்கத்தை ராவணன் அடைந்தான் என்பதில் சந்தேகமில்லை. மேல் நடக்க வேண்டிய காரியத்தைத் தம்பியாகிய நீர் நடத்துவீர். உயிர் நீத்தபின்



பகை என்பது தீர்ந்து விட்டது. லங்கேசனுக்கு உத்தரகிரியைகளை விரோதியாய் இருந்த நானே செய்யலாம். உம்முடைய சகோதரன் எனக்கும் சகோதரனே ஆவான் அல்லவா?'' என்று ராமன் சொல்லி விபீஷணனுடைய மனத்தில் உண்டான குழப்பங்களை அகற்றி, ராவணனுடைய உத்தம கதிக்காகச் செய்ய வேண்டிய கிரியைகளை நடத்தும்படியாகச் சொன்னான்.

ராவணனுடைய அந்தப்புர ஸ்திரீகள் வந்தார்கள். அவர்களுக்குப்பின் சோகமே வடிவம் எடுத்ததுபோல் வந்தாள் பட்டமகிஷியும் ராவணேசுவரனுடைய மிகப் பிரிய மனைவியுமான மண்டோதரி. அழகிகளுக்குள் அழகியான இவள் தரையில் விழுந்து கிடந்த தன் புருஷனைக் கண்டதும், 'ஓ!' என்று கதறி அவனை அணைத்துக் கொண்டு புரண்டாள்.

''உமக்குக் கோபம் வந்தால் இந்திரனும் எதிரில் நிற்கமாட்டானே. தேவரிஷி கந்தர்வர்கள் எவருமே உம்மைக் கண்டு நடுங்கி எட்டுத் திசையிலும் ஓடுவார்களே. ஒரு மானிடனால் தோல்வியடைந்து வீழ்த்தப்பட்டீரே, உமக்குக் கோபம் வரவில்லையா? காட்டில் திரிந்து வந்த ஒரு மானிடன் வீழ்த்தி விட்டானே! இது எனக்கு ஒன்றும் விளங்க வில்லையே! மூன்று லோகங்களிலும் பரவிய உம்முடைய வீர பராக்கிரமம் இதை எப்படிப் பொறுத்தது? ஐயனே! நான் முந்தியே சொன்னேன் அல்லவா? இந்த ராமன் மானிடன் அல்ல. இந்திரனும் அக்கினி தேவனும் யமனும்கூட உம்மை வெல்ல முடியாது. இவன் ஆதி இடை அந்தம் அற்ற மகாவிஷ்ணுவே மனித உடல் எடுத்து அவதரித்து வந்தவன். இவன் ஜன ஸ்தானத்தில் உம்முடைய சகோதரன் கரனைத் தரையில் நின்று வதம் செய்தபோதே நான் சொன்னேன் அல்லவா? யாரும் பிரவேசிக்க முடியாத இந்த லங்கைக்குள் ஹனுமான் புகுந்து நகரத்தை நாசம் செய்தபோதே எனக்குத் தெரிந்துவிட்டது. 'இந்த விரோதத்தைக் கட்டிக் கொள்ளாதீர்' என்று நான் சொன்னதை நீர் கேட்கவில்லை. மகாபதிவிரதையான சீதையின் மேல் ஏன் மோகங் கொண்டீர்? என்னைவிட அவளுடைய வடிவழகு எவ்விதத்தில் மேலானது என்று மதியிழந்தீர்? தனியாக இருந்த அவளை எடுத்து வந்தது மகா பாவம் ஆயிற்றே! அதைச் செய்துவிட்டு இப்போது அதன் பயனை அனுபவித்திரே! அழிந்து போகவே மதியிழந்தீர். விபீஷணன் அல்லவோ நல்ல பேறு அடைந்து விட்டான். நீரோ பிரேதமாகக் கிடக்கின்றீர். காலன் அல்லவோ சீதையின் வடிவு கொண்டு உம்மை இழுத்துச் சென்று இந்த விநாசத்தில் தள்ளி விட்டான். சீதையும் ராமனும் இப்போது சந்தோஷமாகக் கூடி விட்டார்கள். என்னையும் உம்முடைய குலத்தையும் அனைவரையும் துக்க சாகரத்தில் தள்ளி விட்டுப் போய் விட்டீரே, ஐயோ! உம்முடைய அழகிய திருமேனி இந்த நிலைமையில் இருக்கிறதே! ராம பாணங்களால் துளைக்கப்பட்டு ரத்தச் சேறும் புழுதியும் படிந்து பிரகாசமிழந்துகிடக்கிறீரே! என்னால் பொறுக்க முடியவில்லையே! நான் என்ன செய்வேன்! லங்கேசன் என் புருஷன், இந்திரனை வென்றவன் என் மகன், எனக்கு என்ன குறை என்று கர்வங்கொண்டு மோசம் போனேனே! ஒரு வார்த்தை பேசமாட்டீரா? என்னை விதவையாகச் செய்து விட்டீரே! நான் தான் கெட்டேன்!''

இவ்வாறு பிரலாபித்துக் கொண்டு மண்டோதரி ராவணனுடைய பிரேதத்தின் மேல் விழுந்து பிரக்ஞையற்றுக் கிடந்தாள். (தொடரும்)

## இரண்டு கல்லில் ஒரே மாங்காய்!



ஒரே நாளில் பெட்ரோலின் விலை இரண்டு முறை உயர்த்தப்பட்டது. காலையில் பெட்ரோலியம் அமைச்சர் லேஹி சுத்தம் செய்யப்படாத எண்ணெய்க்கு அதிக விலை கொடுக்கவேண்டி இருப்பதால் பெட்ரோல் விலையை லிட்டருக்கு 3 பைசா வீதம் அதிகமாக்கினார். மாலையில் பட்ஜெட்டைச் சமர்ப்பித்த சவான் பெட்ரோல் விலையை இன்னும் 20 காசு லிட்டருக்கு அதிகமாக்கினார்.

(எகனமிக் டைம்ஸ்) - முத்து

இவ்வருட பட்ஜெட்டினால் பத்து லட்சம் சம்பாதித்தாலும் ஒரு லட்சம் சம்பாதித்தாலும் எல்லாம் ஏறத்தாழ ஒன்றுதான். எப்படி? ஒரு லட்சத்துக்கு வருமான வரி ரூ. 59,800. அதாவது வருடத்துக்கு நமக்கு நிற்பது ரூ. 40,200. பத்து லட்சம்! சம்பாதித்தாலோ 66,200 ரூபாய்தான் நம் செலவிற்கு. அதாவது 9,33,800 ரூபாய் வருமான வரி கட்ட வேண்டும். எஸ். நடராஜன்

ஆயிரத்தைக் கண்டவர்

# சிபாரிசுக்கு ஜே!

பள்ளிக்கூடத்திலும் கல்லூரிகளிலும் பிள்ளைகளைச் சேர்க்க எத்தனை சிபாரிசு பிடித்துச் சிரமப்படுகிறோம். ஆனால் அந்தக் கல்லூரி, பள்ளி முதல்வர்கள் மட்டும் என்ன விதிவிலக்கா? அவர்களும் சிபாரிசு பிடித்து அங்கு வந்தவர்கள்தாமே? ஆகவே வெளிப்படையாக எப்படிப் பேசினாலும் சரி, அவர்களுக்கு நம்மிடம் உள்ளூற அநுதாபம்இருக்கும்!

முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு ஆங்கிலப் படிப்பில் சிறந்து விளங்கி, தங்கப் பதக்கமும் பெற்ற ஒரு மாணவனுக்கே ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்வதற்குச் சிபாரிசு தேவைப்பட்டது!

காலஞ்சென்ற மேதை டாக்டர் ரங்காச்சாரியின் சிபாரிசு மூலம் சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தார். எல்.டி. படிப்பு முடித்துக் கொண்டு ஆசிரியரானார்.

அவர்தான் திரு டி. எஸ். ரங்கநாத ஐயர்.

கல்விக் கடலாம் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் பள்ளிக்கூடத்தின் வாசற்படியும் மிதிக்காதவர் என்று அவரைப் பற்றிய சரிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனாலும் 'குரு மகராஜ்' என அழைக்கப் பெறும் அந்த அவதார புருஷரின் பெயரால் எத்தனையோ அறப்பணி மன்றங்கள், பள்ளிக்கூடங்கள் சீரும் சிறப்புமாக இன்று பணியாற்றுகின்றன!

சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் மேற்பார்வையில் உள்ள தியாகராயநகர் ஸ்ரீ ராமகிருஷ்ண உயர்நிலைப் பள்ளியில்தான் திரு டி. எஸ். ரங்கநாத ஐயர் 1935ல் ஆசிரியராகச் சேர்ந்தார்.

1964–65ல் உதவித் தலைமையாசிரியராகவும் அதன் பிறகு வட கிளையில் உள்ள பள்ளியின் தலைமையாசிரியராகவும் பணி புரிந்து, கடந்த இரண்டு ஆண்டுகளாகப் பிரதானப் பள்ளியின் தலைமையாசிரியராகப் பணியாற்றி அண்மையில் ஓய்வு பெற்றார்.

தமது ஆயிரக் கணக்கான மாணவர்கள் படித்துப் பட்டம் பெற்று, தாய் நாட்டிலும் வெளி நாடுகளிலும் உயர்ந்த பதவிகள் வகிப்பதைப் பார்த்துப் பெருமையும், மகிழ்ச்சியும் கொண்டிருப்பவர்.

ஏழை மாணவனாக இருந்தபோதும், பள்ளிப் பாடங்களில் அதிகத் தேர்வு எண்கள் பெற்றிருந்ததாலும், பி.ஏ. வரை உபகாரச் சம்பளம் பெற்றுப் படித்த இவரிடம், ''வேறு வேலைக்குச் செல்ல வேண்டும் என்ற விருப்பம் பட்டம் பெற்றவுடன் தோன்றியதா ?'' என்று கேட்டேன்.

''இல்லை. பட்டம் பெற்றவுடன் பாபநாசம் தாலுகா ஆபீசில் குமாஸ்தா வேலை பார்த்த போதிலும் மனம் அதில் இல்லை. ஆசிரியர் வேலையில் சேர வேண்டுமென்ற ஆசையால் குமாஸ்தா வேலையை ராஜிநாமா செய்தேன். எனக்கு ஆங்கிலப் பேராசிரியராக இருந்த வாட்சன் சிபாரிசு மூலம் தஞ்சை செயின்ட் பீட்டர் உயர்நிலைப் பள்ளியில் பயிற்சி இல்லாத ஆசிரியராக வேலை பார்த்தேன். பிறகே சென்னை வந்தடைந்தேன், முறையான ஆசிரியர் தொழில் பயிற்சி பெற.''

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் கல்வித் தொண்டுக்காக சங்கீத வித்வான் முசிரி சுப்ரமணிய ஐயர், தமிழ் நாட்டில் மட்டுமின்றி பர்மா, மலேயா போன்ற வெளி நாடுகளிலும் கச்சேரி செய்து நிதி வசூல் செய்து கொடுத்தார். முசிரியின் சிபாரிசால்தான் திரு ரங்கநாத ஐயருக்கு மிஷன் பள்ளியில் ஆசிரியர் வேலை கிடைத்தது. பாருங்கள், மறுபடியும் சிபாரிசுதான் வேலை செய்திருக்கிறது. வேலை கிடைக்க! அதனாலென்ன, தகுதி யில்லாதவர்களுக்குச் சிபாரிசு செய்வதென்றால்தானே தயங்கத் தோன்றும்? முசிரிக்கு இந்த விதமான சங்கடம் ஏதும் இருந்திருக்காதுதானே?

வேதாந்த தேசிகன், திரு அனந்த என். சுப்பிரமணிய ஐயர், திரு என். ஸ்ரீநிவாஸாசாரியார், எம். சாமிநாத ஐயர் ஆகியோர் அலங்கரித்த இடத்துக்கு ஐந்தாவது தலைமை ஆசிரியராகத் திரு ரங்கநாத ஐயர் வந்தார்.

இளமை முதல் வயோதிகம் வரையில் கல்வித் துறையிலேயே பணி புரிந்து, அநுபவம் பெற்ற திரு ரங்கநாத ஐயர், இன்றைய மாணவர் உலகுக்குச் சொல்வது:

''மாணவப் பருவத்தில் படிப்பில் ஒருமுகப்பட்ட சிந்தனையுடன் ஈடுபட வேண்டும். பரீட்சை எழுதிப் பாஸ் பண்ணுவது கூட முக்கியமில்லை. அது பல சந்தர்ப்பங்களில் அதிருஷ்டத்தைப் பொறுத்த விஷயமாகி விடுகிறது. ஆனால் தினந்தோறும் கடமையுணர்வுடன் படிக்க வேண்டியது முக்கியம். அதை ஒழுங்காகச் செய்தால் பின்னர் மார்க் குறைந்தாலோ அல்லது துரதிருஷ்ட வசமாய்த் தோல்வி கண்டு விட்டாலோ கூட மனவருத்தமடைய வேண்டியதில்லை.''

நேரு பிரதமராக இருந்தபோது குழந்தைகள் தினத்தை யொட்டிப் புதுதில்லிக்குச் சென்னையிலிருந்து சென்ற பள்ளி மாணவர்களோடு திரு ரங்கநாத ஐயரும் போனார். அங்கே நேருவைக் கண்டு பேசும் அரிய வாய்ப்பினையும் பெற்றார்.

(படம்: இடது புறத்திலிருந்து இரண்டாவதாக திரு ரங்கநாத ஐயர்)

—பேட்டி: ஏ. சுவாமிநாதன்



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் 39

## காரிருள் சூழ்ந்தது!

ஆதித்த கரிகாலனுடைய பயங்கரமான வெறி கொண்ட சிரிப்பு, யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்திருந்த வந்தியத்தேவனுடைய காதில் விழுந்து அவனுக்கு ரோமாஞ்சனத்தை உண்டாக்கியது. விரைவில் ஏதோ விபரீதம் நிகழப்போகிறது என்று அவனுடைய உள்ளுணர்ச்சி கூறியது. நிழல் வடிவங் கொண்ட யமதர்மராஜன் கையில் பாசக் கயிறுடன் அந்த அறையில் பிரசன்னமாகியிருந்தான். பாசக் கயிற்றை வீசுவதற்குச் சமயம் நோக்கிக் கொண்டிருந்தான். ஆனால் யார் மீது எறியப் போகிறான்? யாருடைய-உயிரைக் கொண்டு போகப் போகிறான்? கரிகாலன் உயிரையா? அல்லது நந்தினி தேவியின் உயிரையா? ஒரு வேளை அவர்கள் இருவரையுமே மரணம் நெருங்கிக் கொண்டிருக்கிறதா? சகோதரன் சகோதரியைக் கொல்லப் போகிறானா? சகோதரி சகோதரனைக் கொல்லப் போகிறாளா? அல்லது இருவரும் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாகப் போகிறார்களா? — இம்மாதிரி ஏதும் நடவாதபடி தடுப்பதற்குத்தான் இளைய பிராட்டி தன்னை விரைந்து போகும்படி அனுப்பி வைத்தாள். தன்னால் இயன்றதைச் செய்தாகி விட்டது. இருவரிடமும் அவர்களுக்குள்ள உறவைப் பற்றிச் சொல்லியாகி விட்டது. இருவருடைய உள்ளமும் இளகும்படியும் செய்தாகி விட்டது. ஆனாலும், பலன் ஏற்படுமா? வெறி கொண்ட கரிகாலனையோ, பிரமை பிடித்த நந்தினியையோ, கொடூரச் செயல் எதுவும் செய்யாமல் தடுக்க முடியுமா? இந்தச் சமயத்தில் தான் நடுவில் குறுக்கிடுவதால் ஏதேனும் நன்மை விளையுமா? ஒரு வேளை இருவருக்கும் மத்தியில் தன்னுடைய உயிரைப் பலி கொடுப்பதினால், அவர்களுடைய குரோதம் தணியுமா? —இவ்வாறெல்லாம்

எண்ணி வந்தியத்தேவனுடைய உள்ளக் கடல் கொந்தளித்துக் கொண்டிருந்தது. இன்னும் சிறிது பொறுத்துப் பார்க்கலாம், — தான் அவசரப்பட்டுக் குறுக்கிடுவதினால் காரியம் கெட்டுப் போக வேண்டாம் என்று பல்லைக் கடித்துக் கொண்டு நின்றான்.

* * *

கரிகாலருடைய வெறி கொண்ட சிரிப்பு அடங்கிய பிறகு, அவர்களுடைய சம்பாஷணை மேலும் தொடர்ந்தது.

"ஐயா! என் வாழ்நாளில் தங்களுக்கு மகிழ்ச்சி தரும்படியான காரியம் எதுவும் நான் செய்ததில்லை. சாகும் சமயத்திலாவது தாங்கள் சிரித்து மகிழ்வதற்குக் காரணமானது பற்றிச் சந்தோஷம்" என்றாள் நந்தினி.

"ஆம், நந்தினி! இன்றைக்கு எனக்கு மிகச் சந்தோஷமான தினந்தான். இத்தனை வருஷங்களாக நீ என்னைப் படுத்தி வைத்த பாட்டுக்கெல்லாம் இன்றைக்கு முடிவு ஏற்படப் போகிறது. இந்தத் தடவை நான் காஞ்சியிலிருந்து புறப்பட்ட போது ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டுதான் வந்தேன். உன்னை நேரில் பார்த்த பிறகு ஒருவேளை என் மனம் சலித்து விடுமோ என்று பயந்து கொண்டிருந்தேன். அதற்கிடமில்லாமல், நீயே வாளை என் கையில் கொடுத்து விட்டாய்!" என்று கூறிக் கரிகாலன் மீண்டும் சிரித்தான்.

"கோமகனே! எனக்கும் இன்று சுதினந்தான். தங்கள் கையினால் வெட்டுண்டு இறப்பதைப் போன்ற இனிமையான மரணம் எனக்குக் கிட்டப் போவதில்லை. ஒரு காலத்தில் தாங்கள் என் கழுத்தில் பூமாலை சூட்டப் போகிறீர்கள் என்று ஆசைக் கனவு கண்டு கொண்டிருந்தேன். அது நிறைவேற முடியாமற் போயிற்று. தங்கள் கையிலுள்ள வாளை என் கழுத்தில் சூட்டிக் கொள்ளும் பேறாவது எனக்குக் கிடைக்கட்டும். ஐயா! நேரம் ஆகிறது. ஏன் தாமதிக்கிறீர்கள்?" என்றாள் நந்தினி.

"பல வருஷம் தாமதித்தாகிவிட்டது. இன்னும் சில நிமிஷம் தாமதிப்பதினால் நஷ்டம் ஒன்றுமில்லை. நந்தினி! சற்று என்னைப் பார்! கடைசி முறையாக என்னைப் பார்த்து என் கேள்விக்கு மறுமொழி சொல்! பூமாலை சூட்ட வேண்டிய கையினால் நான் ஏன் உனக்கு வாள் மாலை சூட்ட வேண்டும்? நீ ஒரு காலத்தில் ஆசைக் கனவு கண்டது உண்மையாக இருந்தால், இப்போது ஏன் அதை நிறைவேற்றிக் கொள்ளக் கூடாது? அதற்குத் தடையாக நிற்பவர்கள் யார் என்று சொல்லு! உன்னைக் கொல்லுவதற்குப் பதிலாக அவர்களைக் கொன்று விட்டு மறு காரியம் பார்க்கிறேன்!" என்றான் கரிகாலன்.

"வேண்டாம், ஐயா! வேண்டாம்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. என் காரணமாக, இனி வேறு யாரும் சாக வேண்டாம்! யாரும் தடையாக நிற்கவும் இல்லை. என்னுடைய தலைவிதிதான் தடையாக இருக்கிறது!"

"அந்தத் தடையை ஒரு நொடியில் நான் தவிடுபொடி செய்து விடுகிறேன். தலைவிதியின் பேரில் பாரத்தைப் போடாதே! பிரம்மா எழுதிய எழுத்தை நான் மாற்றி எழுதுகிறேன், பார்!...."

நந்தினி குறுக்கிட்டு, "பிரம்மா எழுதிய எழுத்தை மாற்றி எழுதலாம். ஆனால் ஒருவருடைய பிறப்பை மாற்றி அமைக்க முடியுமா?" என்று கேட்டாள்.

"எதைப் பற்றிக் கேட்கிறாய், நந்தினி! நமது சிறு பிராயத்தில் உன்னைப் பட்டர் குலத்துப் பெண் என்றும், அதனால் உன்னுடன் சிநேகம் செய்யக் கூடாதென்றும் என் குடும்பத்தினர் சொன்னார்களே, அதைப் பற்றியா? இல்லை! நீ பட்டர் குலத்தில் வளர்ந்தவளேயன்றி அந்தக் குலத்தில் பிறந்தவள் அல்ல என்பதை நீயும் நானும் முன்பே அறிந்திருந்தோம்."

"அதைப் பற்றி இப்போது சொல்லவில்லை, ஐயா! தங்கள் அருமை நண்பர், வாணர் குலத்து வீரர் — கொண்டு வந்த செய்தியைப் பற்றியே சொல்லுகிறேன். பழையாறை இளையபிராட்டி அவசரமாகச் சொல்லி அனுப்பிய செய்தியைப் பற்றியே கூறுகிறேன். நான் தங்கள் சகோதரி என்பதை இதற்குள்ளாகவே மறந்து விட்டீர்களா?"

"நந்தினி! அன்றைக்கு நான் உன்னிடம் அதைப் பற்றிச் சொன்னபோது, நீ அதை நம்பவில்லை. உன்னையும் என்னையும் பிரித்து வைப்பதற்குச் செய்யும் இன்னொரு சூழ்ச்சி என்றாய். பிறகு நானும் யோசித்து அதே முடிவுக்கு வந்தேன். அதை நிச்சயம் செய்து கொள்ள வேண்டுமானால்..."

"வேண்டாம்! வேண்டாம்! எனக்கு அதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. கோமகனே! தங்களுக்கும் எனக்கும் இரத்த சம்பந்தம் ஏதுமில்லை...."

"பின், என்ன தடை நந்தினி?"

"நான் தங்களுக்குப் பாட்டனார் முறையிலுள்ள பழுவேட்டரையரை மணந்தவள். தங்களுக்குப் பாட்டிமுறையில் உள்ளவள். இது போதாதா?"

"நந்தினி! அந்தக் கதையைச் சொல்லி மறுபடியும் என்னை ஏமாற்

றப் பார்க்க வேண்டாம். உலகத்தின் முன்னிலையில் நீ பழுவேட்டரையரின் இளைய ராணியாக இருக்கலாம். ஆனல் உண்மையில் நீ அவரை மணந்து கொள்ள வில்லை. ஏதோ காரணார்த்த மாகவே அவருடைய அரண்மனையில் வந்திருக்கிருய். முன்னெரு தடவை, தஞ்சையில் நான் கேட்ட போது, இவ்வாறுதான் கூறினுய். அப்போது நான் நமது ஆசைக் கனவை நினைவூட்டினேன். அதை நிறைவேற்றுவதற்கு நீ பயங்கரமான நிபந்தனைகளை விதித்தாய்! பழுவேட்டரையரைக் கொன்று, என் தந்தையையும், சகோதரியையும் சிறையில் அடைத்துவிட்டு, உன்னைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டும் என்ருய். வெறிகொண்ட ராட்சஸி நீ என்று தீர்மானித்துக் கொண்டு நான் காஞ்சிக்குப் போனேன். அப்புறம் நீ என்னை விட்டு விட்டாயா? இல்லை! ஓயாமல் ஒழியாமல் கனவிலும் நினைவிலும் வந்து என்னை வதைத்துக் கொண்டிருந்தாய். சில சமயம் அழுது புலம்பி என்னைத் துன்புறுத்தினுய்; சில சமயம் மோகனப் புன்சிரிப்புச் சிரித்து என் உயிரை வதைத்தாய்; சில சமயம் பிச்சியைப் போல் சிரித்து என்னையும் பித்தனுக்கினுய்!....''

''கோமகனே! தங்களுடைய மனப் பிரமைக்கு என் பேரில் ஏன் குற்றம் சுமத்துகிறீர்கள்? தாங்கள் எனக்குச் செய்த அநீதிக்கும் கொடுமைக்கும் பலனை அநுபவித்தீர்கள். அதற்கு நான் என்ன செய்வேன்? நான் மட்டும் கஷ்டப்பட வில்லை என்று எண்ணுகிறீர்களா? பழுவேட்டரையர் மாளிகையின் சுகபோகங்களில் ஆழ்ந்து குதூகலமாயிருந்தேன் என்று நம்புகிறீர்களா?'' என்று நந்தினி கேட்ட குரலில் மீண்டும் பழையபடி ஆத்திரமும் கொடூரமும் பொங்கித் ததும்பின.

இதைக் கேட்டு வந்தியத்தேவன் பீதி கொண்டான். அவனுடைய உடம்பு படபடத்தது.

ஆதித்த கரிகாலரின் ஸ்வரமும் ஏறத் தொடங்கியது.

''நீயும் கஷ்டப்பட்டதாகவா சொல்கிருய்? அப்படியானுல், இப்போது ஏன் நாம் ஏதேதோ பேசிக் கொண்டு வீண் பொழுது போக்க வேண்டும்? என்னுடன் புறப்பட்டு வருவதற்கு உன்னுடைய சம்மதத்தைத் தெரியப்படுத்து. உடனே புறப்பட்டுச் செல்வோம். உனக்காக நான் இந்தப் பெரிய சோழ சாம்ராஜ்யத்தைத் தியாகம் செய்துவிட்டு வரச் சித்தமாயிருக்கிறேன். பிறந்த நாட்டையும் தாய் தந்தையரையும் உற்ருர் உறவினரையும் துறந்துவிட்டு வருகிறேன். கப்பல் ஏறிக் கடல் கடந்து செல்வோம். கடல்களுக்கு அப்பால் எத்தனை எத்தனையோ அற்புதமான தீவ தீவாந்தரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றை அடைவோம். உன்னைக் காட்டிலும் இந்த இராஜ்யம் எனக்குப் பெரியதன்று.''

''கோமகனே! தாங்கள் இராஜ்யத்தைத் துறந்தாலும் துறப்பீர்கள்! ஆனல்



# கல்லூரிகள் திறக்கின்றன

வெள்ளை நிறத்தினில் "கோட்டு"—கையில்
விரித்து மடக்கியே போட்டு
மெல்ல நடந்(து)அவன் சென்ருன்—அவன்
மெடிக்கல் "காலேஜ் ஸ்டூடண்டு".

தாவணி பாவாடை ஜாக்கெட் — இன்பத்
தமிழுடன் ஆங்கிலப் பேச்சு
நாவல் சினிமா ஆராய்ச்சி — செய்யும்
நங்கையர் "பி. யூ. சி." ஆவர்!

ஜங்கியும் கவுனுமே போட்டுத் — தினம்
ஜட்டி அடிப்பவர் மேலும்
அங்கம் தெரிந்திடச் செல்லும் — அவர்
அத்தனை பேர்களும் "டீசி".

- நெல்லை ஆ. கணபதி



இந்தக் கீழ்க்குல மகள் புராதனமான சோழ சிங்காதனத்தில் ஏறுவதற்குச் சம்மதிக்க மாட்டீர்கள், இல்லையா?'' என்று கூறிவிட்டு நந்தினி நகைத்த நகைப்பில் தீப்பொறி பறந்தது.

''பெண்ணே! இதை வேறு விதமாகப் பார்! உனக்கு என்னைக் காட்டிலும் சோழ சிங்காதனம் உயர்வானதா? என்னிடம் நீ அந்த நாளிலிருந்து காட்டிய பிரியம் எல்லாம் சிங்காதனம் ஏறி மணி மகுடம் சூடும் ஆசையினால் நடித்த நடிப்புத்தானா?'' என்றான் கரிகாலன்.

''ஆகா! அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். எனக்கு அரண்மனை வாழ்வும் அரச போகமும் அரியாசனமும்தான் வேண்டும். இவற்றுக்காகவே, பழுவேட்டரையரை நான் மணந்தேன். இவற்றுக்காகவே வீர பாண்டியரைக் காப்பாற்றுவதற்கு முயன்றேன்.....''

''அடி பாதகி! அவன் பெயரை எதற்காக இப்போது சொல்லுகிறாய்?'' என்று கர்ஜனை செய்தான் கரிகாலன். நந்தினி மறுமொழி கூறுவதற்கு முன்னால் அவன் தொடர்ந்து மேலும் கூறினான்:

''ஆகா! எனக்குத் தெரிகிறது. உன்னுடைய சூழ்ச்சி யெல்லாம் எனக்கு இப்போது நன்றாய்த் தெரிகிறது. வீரபாண்டியனுடைய பெயரைச் சொன்னால் எனக்கு ஆத்திரம் வரும். நான் உன்னை உண்மையாகவே கொல்ல வருவேன். உடனே இங்கு நீ காலால் இட்டதைத் தலையால் செய்யக் காத்திருக்கும் வாலிபச் சிங்கங்களில் ஒருவன் வந்து என்னைக் கொன்று விடுவான் என்பது உன் அந்தரங்க நோக்கம். அடி சண்டாளி! அந்த வந்தியத் தேவன் எங்கே இருக்கிறான்? எங்கே அவனை மறைத்து வைத்திருக்கிறாய், சொல்! இங்கேதான் அவன் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். நீ என்னோடு வர மறுப்பதற்குக் காரணமும் இப்போது நன்றாய்த் தெரிகிறது. ஆமாம்; அவன் தான் காரணம்! பழுவேட்டரையரை நீ இவ்விடம் விட்டு அனுப்பியதற்கும் அவன்தான் காரணம். நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து பேசிக் கொண்டுதான் இப்படி யெல்லாம் சூழ்ச்சி செய்திருக்கிறீர்கள்..... ஆகா! எப்படி நான் ஏமாந்து போனேன்? எங்கே அந்தப் பாதகன் வந்தியத்தேவன்? எங்கே உன்னுடைய புதிய காதலன்.....?''

இவ்வாறு ஆதித்த கரிகாலர் வெறிக் கூச்சல் போட்டுக் கொண்டே கத்தியைச் சுழற்றிக் கொண்டு அங்குமிங்கும் அந்த அறையில் ஓடத் தொடங்கினார். ஒரு சமயம் யாழ்க் களஞ்சியத்தை நெருங்கி வந்தார். அப்போது நந்தினி நேரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று அவர் காலடியில் விழுந்து ''கோமகனே! இதைக் கேளுங்கள்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. நான் சொல்வதைக் கேட்டுவிட்டுப் பிறகு எது வேணுமானாலும் செய்யுங்கள். வாணர் குல வீரரைப் பற்றித் தாங்கள் கூறுவது அபாண்டம். பூமாதேவி பொறுக்கமாட்டாள். அவருக்கு ஏதேனும் தாங்கள் தீங்கு செய்தால், என் அருமைத் தோழி மணிமேகலை உயிரையே விட்டுவிடுவாள்! தங்களுக்கு மகத்தான பாவம் சம்பவிக்கும். வேண்டாம்! இதோ என் நெஞ்சைப் பிளந்து பாருங்கள். வீரபாண்டியருடைய வாளினாலேயே என் நெஞ்சைக் கீறிப் பாருங்கள். அதற்குள்ளே தங்களுடைய திருவுருவத்தைத் தவிர வேறு எதுவும் இராது. இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!'' என்று கூறிவிட்டு நந்தினி விம்மினாள்.

ஆதித்த கரிகாலனின் வெறி மீண்டும் சிறிது தணிந்ததுபோல் காணப்பட்டது.

''அப்படியானால், என்னுடன் வருவதற்கு நீ ஏன் மறுக்கிறாய்? அதையாவது சொல்லிவிடு! ஏன் என் கையினால் உன்னை வெட்டிக் கொல்லும்படி தூண்டுகிறாய்? உண்மையைச் சொல்லிவிடு!'' என்று அலறினான் கரிகாலன்.

''ஆகட்டும்; இதோ சொல்லுகிறேன். என்னுடைய நெஞ்சில் தங்களைத் தவிர வேறு யாருக்கும் இடம் கிடையாது. இது சத்தியமான போதிலும், நான் தங்களுடன் வர முடியாது. தங்களை மணந்து கொள்ளவும் இயலாது. அதற்குத் தடையாயுள்ள ஒரு பெரிய காரணம் இருக்கிறது. அதைச் சொல்லுவதற்கே எனக்குப் பயமாயிருக்கிறது. ஆம், கோமகனே! உண்மையில் அதைச் சொல்லுவதற்காகவே நான் இங்கே வந்தேன்; தங்களையும் வரச் செய்தேன். அதைச் சொல்லிவிட்டு என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். இந்தத் துர்ப்பாக்கியசாலியை மறந்து விட்டுத் தங்கள் குலத்துக்கும் பதவிக்கும் உகந்த பெண்ணை மணந்து வாழும்படி கெஞ்சிக் கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். ஆனாலும் அதைச் சொல்லத் தயங்கினேன். அதைச் சொல்லலாம் என்று நினைக்கும்போதே பயமாயிருக்கிறது. தங்களுடைய கோபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்வோமோ, அதனால் இன்னும் என்ன தீங்கு நேருமோ என்று அச்சமாயிருக்கிறது. தாங்கள் அமைதியுடன் இருப்பதாக வாக்குக் கொடுத்தால்...''

''சொல், நந்தினி, சொல்! எவ்வளவு கசப்பான விஷயமாயிருந்தாலும் கேட்டுப் பொறுத்துக் கொள்வேன். சற்று



## விநோத சம்பிரதாயம்

வைஷ்ணவ சோழிய சமூகத்தில் காசியாத்திரை முடிந்து, மாப்பிள்ளையும் பெண்ணும் மாலை மாற்றிக் கொள்வதற்கு முன்னால் மணப் பெண்ணின் மணமாகாத தங்கைக்கு, மணமகளின் வருங்கால மாமியார் மாலை அணிவிக்கிறாள். 'உன் அக்காவுக்கு நடந்தமாதிரி உனக்கும் விரைவில் திருமணம் வரும்' என்று நினைவூட்டும் சம்பிரதாயம்போலும்.

மணமகன் பெண்ணின் கழுத்தில் மூன்று முடிச்சுகள் போட்டானதும், மணப் பெண் அணிந்திருந்த கூறைப் புடவையை ஒரு பலகையில் வைத்து, அதன் மேல் இலை போடுகிறார்கள். அந்த இலையில் உணவு பதார்த்தங்களைப் பரிமாறுகிறார்கள். ஒரே இலையில் மணப் பெண்ணும் அவளது நாத்தனாரும் அமர்ந்து உணவு அருந்துகிறார்கள். 'எங்கள் வீட்டுப் பெண் போலவே நீயும்' என்று உணர்த்துவதற்காக இப்படி ஒரே இலையில் உணவருந்தும் பழக்கத்தை மேற்கொள்கிறார்கள் போலும்! தகவல்: பி. எஸ். எம்.

முன், உன்னை மறந்து விட்டு வேறு பெண்ணை மணந்து சந்தோஷமாயிருக்கும்படி புத்திமதி கூறினாய்! அதற்கே நான் கோபித்துக் கொள்ள வில்லையே? வேறு என்ன கூறினால்தான் கோபித்துக் கொள்ளப் போகிறேன்? ஆனால் மறுபடியும் ஏதாவது கற்பனை செய்யாதே!...''

''கோமகனே! என் வாழ்க்கையே ஒரு கற்பனை. என் பிறப்பே ஒரு புனை கதை. என் வாழ்க்கையைச் சிறிது காலம் நீடிப்பதற்காகவும், நான் கொண்ட கருமத்தை முடிப்பதற்காகவும் நான் பல முறை கற்பனைக் கதை புனைய வேண்டியதாயிருந்தது. இனி அதற்கு அவசியம் ஒன்றும் இல்லை. இன்றுடன் என் பொய் வாழ்க்கையை முடித்துக் கொள்ளப் போகிறேன். தங்களுடைய மனத் துன்பத்தை அதிகமாக்கக் கூடாது என்பதற்காகவே சில உண்மைகளை நான் அறிந்த பிறகும் தங்களுக்குச் சொல்ல வில்லை. தாங்கள் என்னை வெறுத்துவிட வேண்டும் என்பதற்காகவே பல கற்பனைகளைப் புனைந்தேன். பல பயங்கரமான காரியங்களைச் செய்யும்படி கூறினேன். என் உள்ளத்தில் ஓயாத போராட்டம் நடந்து கொண்டிருந்தது. என் கடமையும், நான் எடுத்துக் கொண்ட சபதமும், தங்கள் பேரில் கொண்ட காதலும் ஓயாமல் போராடிக் கொண்டிருந்தன. இவற்றினால் நான் அடைந்த துயரத்தைச் சொல்லி முடியாது. கடைசியாக, இன்று அந்தப் போராட்டமெல்லாம் முடியும் தருணம் நெருங்கியிருக்கிறது. என்னைப் பற்றிய உண்மையைச் சொல்லி விடுகிறேன். அதைக் கேட்ட பிறகு என்னைத் தங்கள் கையினாலேயே கொன்று விடுங்கள்! ஆனால் வேறு யாருக்கும் தாங்கள் தீங்கு செய்யவேண்டாம்! வீண் பாவத்துக்கும் பழிக்கும் ஆளாக வேண்டாம்....!''

''பாவம்! பழி! இனிப் புதிதாக நான் அடையக்கூடிய பாவம் — பழி என்ன இருக்கிறது? ஆயினும், சொல், நந்தினி! என்னுடன் நீ வருவதற்கு — நம் இளம் பிராயத்து ஆசைக் கனவு நிறைவேறுவதற்கு — தடையாயிருக்கும் உண்மையான காரணம் என்னவென்று சொல்! அது எவ்வளவு பயங்கரமான உண்மையாக இருந்தாலும் சொல்! அதோ அந்தத் திரைச் சீலைக்குப் பின்னால் யாரோ ஒளிந்திருக்கிறார்கள் என்று நான் எண்ணிக் கொண்டிருந்த வரையில், ஒளிந்திருப்பது யார் என்று தெரியாதிருந்த வரையில், என் மனம் அமைதி இழந்திருந்தது. உன்னுடன் பேசிக் கொண்டிருந்த போது, என் உள்ளம் அதைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தது. ஒளிந்திருந்தவள் மணிமேகலை என்று தெரிந்த பிறகு என் மனக் குழப்பம் நீங்கியது. உண்மை தெரியாதிருக்கும் வரையிலேதான் பயம், கோபம், குழப்பம் எல்லாம்! எவ்வளவு கசப்பாயிருந்தாலும் உண்மை தெரிந்து போய் விட்டால் மனம் அமைதி அடைந்து விடும் அல்லவா?''

''கோமகனே! நான் சொல்லப் போகும் செய்தியினால் தங்கள் மனம் உண்மையிலேயே அமைதி அடையட்டும். அதுதான் என் பிரார்த்தனை. ஆனால் அந்தச் செய்தி நான் தங்களுடன் வருவதோ, தங்களை மணப்பதோ முடியாத காரியம் என்பதையும் நிரூபிக்கும். என் வாழ்க்கையின் முடிவு, என் துன்பங்களுக்கு விமோசனம், — மரணம் ஒன்றுதான் என்பதையும் தெரியப்படுத்தும். வாணர் குலத்து வீரர் என்னுடைய அன்னையைப் பற்றிய செய்தி கொண்டு வந்தார். அது உண்மை என்று நான் அறிவேன். ஈழ நாட்டில் வெறி கொண்டு அலைந்து திரிந்து கொண்டிருந்த மாதரசியைப் பற்றி நான் அறிவேன். அவள் என் அன்னை என்று அறிவேன். இது மற்றும் பலருக்கும் தெரிந்திருந்தது. ஏனெனில், அந்தப் பெண்ணரசிக்கும் எனக்கும் உருவத் தோற்

றத்தில் அமைந்திருந்த ஒற்றுமையைப் பலரும் காணக் கூடியதாயிருந்தது. என்னை என் தாயார் என்று சிலர் சந்தேகிக்கும்படி யிருந்தது. ஆனல் என் அன்னையை அத்தகைய வெறியளாக்கிய காரணம் இன்னதென்பதையும் சில காலத்துக்கு முன்பு நான் அறிந்து கொண்டேன். அது என்னைத் தவிர வேறு யாருக்காவது தெரியுமா என்பதை நான் அறியேன். யாரிடமும் இது வரையில் நான் சொன்னதில்லை. இப்போதுதான் தங்களிடம் முதன் முதலாகச் சொல்லப் போகிறேன். ஐயா! என் தந்தை யார் என்பதைத் தங்களுக்குச் சொல்லப் போகிறேன். கருணை கூர்ந்து எனக்குச் சற்றுமுன் கொடுத்த வாக்குறுதியை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். ஆத்திரத்துக்கும் குரோதத்துக்கும் இடங்கொடாதீர்கள்....''

இவ்விதம் பலமான பூர்வ பீடிகை போட்டுக் கொண்டு நந்தினி ஆதித்த கரிகாலரை மிக நெருங்கி அவர் காதண்டை மிக மெல்லிய நடுங்கிய குரலில், ''என்னைப் பெற்ற தந்தை...... தான்!'' என்று கூறினள். கூறிவிட்டு விம்மி விம்மி அழத் தொடங்கினள்.

ஆதித்த கரிகாலன் ஆயிரம் தேள் கொட்டியவனைப் போல் ஒரு கணம் துடிதுடித்துத் துள்ளினன்.

''இல்லை, இல்லை, இல்லை! ஒருநாளும் இல்லை! நீ சொல்லுவது பொய், பொய், பெரும் பொய்!'' என்று உரக்கக் கத்தினன்.

மறுகணமே அவனுடைய ஆவேசம் அடங்கியது. வேதனை மிகுந்த குரலில், ''ஆம், நந்தினி, ஆம், நீ கூறியது உண்மையாகவே இருக்க வேண்டும். இப்போது எல்லாம் எனக்குத் தெரிகிறது. உன் மனத்திலே நிகழ்ந்திருக்கக் கூடிய போராட்டத்தைப் பற்றிய உண்மையும் தெரிகிறது. நீ எவ்வளவு துன்பப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. உன் குழப்பத்துக்கும் தயக்கத்துக்கும் உன் பயங்கரமான வேண்டுகோளுக்கும் காரணம் தெரிகிறது. அன்றைக்கு நீ என்னுடைய காலில் விழுந்து மன்றாடிய போது நான் உன் வேண்டுகோளை மறுத்தது எவ்வளவு பெரிய கொடுமை என்று தெரிகிறது! நந்தினி! உலகில் வேறு எத்தனையோ தீங்குகளுக்குப் பிராயச்சித்தம் உண்டு. ஆனல் நான் செய்ததற்குப் பிராயச்சித்தம் கிடையாது. நம் இருவருக்கும் நடுவில் உள்ள தடை நீங்க வழியே கிடையாது! ஐயோ! இந்தப் பெரும் பாரத்தை இத்தனை நாட்கள் எப்படி உன் மனத்தில் வைத்துத் தாங்கிக் கொண்டிருந்தாய்? எப்படி இந்தப் பாதகன் இப்பூமியில் உயிர் வாழ்வதைச் சகித்துக் கொண்டிருந்தாய்? நல்லது; நம் இருவருடைய வாழ்க்கைக்கும் பரிகாரம் ஒன்றுதான்; விமோசனம் ஒன்றுதான். இதோ; நந்தினி! என் பிராயச்சித்தம்!....''

* * *

யாழ்க் களஞ்சியத்திலேயிருந்து வந்தியத்தேவன் மேற்கூறிய சம்பாஷணைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். இடையிடையே கரிகாலரின் வெறி மூர்த்தண்யமாகிக் கொண்டிருந்த போது அவன் அவர்களுக்கிடையே போக எண்ணினன். பிறகு அதனல் என்ன விபரீதம் நேரிடுமோ என்று தயங்கினன். அவர்களுடைய உணர்ச்சி மயமான பேச்சு அவனை ஒருபுறத்தில் செயலற்றவனகச் செய்து கொண்டிருந்தது. நந்தினி தன்னுடைய தந்தை இன்னர் என்று கூறியது மட்டும் அவன் காதில் நன்ருக விழவில்லை. ஆனல் அவள் என்ன சொல்லியிருக்கக் கூடும் என்று அவன் மனத்தில் ஓர் ஊகம் உண்டாயிற்று. அது அவனைத் 'திடுக்கிடச் செய்தது' என்ருலும், வேறு எந்தவிதமாகக் கூறினுலும், அது வெறும் சம்பிரதாயமாகவே இருக்கும். அம்மாதிரி ஒரு பெரும் அதிர்ச்சியை அவனுடைய அதிர்ச்சிகள் நிறைந்த வாழ்க்கையில் அவன் அநுபவித்ததே இல்லை.

கடைசியாக, ஆதித்த கரிகாலர் அடங்கிய மெல்லிய தழுதழுத்த குரலில், நந்தினி கூறியதை ஒப்புக் கொள்ளும் முறையில் வார்த்தை சொல்லிக்கொண்டிருந்த போது, அவனுடைய ஆர்வமும் கட்டுக் காவலைக் கடந்தது. அவர் உரத்துச் சத்தமிட்டுக் கொண்டிருந்த வரையில் அவன் அவ்வளவாகப் பயப்படவில்லை; இப்போதுதான் அதிகமாக அஞ்சினன். என்ன செய்யப் போகிருரோ என்ற பெருங் கவலையினல், யாழ்க் களஞ்சியத்திலிருந்து சிறிது தலையை நீட்டி எட்டிப் பார்த்தான். பார்வைக்கு இலக்கான இடத்தில் நந்தினியும் கரிகாலரும் இல்லை. ஆனல் வேருெரு காட்சியைக் கண்டான். சுவரில் பதிந்திருந்த நிலைக் கண்ணுடியில் அந்தக் காட்சி தெரிந்தது. வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவு துவாரத்தின் வழியாக ஒரு கோரமான முகம் தெரிந்தது. அது மந்திரவாதி ரவிதாஸனுடைய முகந்தான்! அடுத்த கணத்தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவு மெதுவாகத் திறப்பதை வந்தியத்தேவன் கண்

டான். இறந்த கதவின் வழியாக முதலில் ஒரு புலியின் தலையும் பிறகு அதன் உடலும் வெளி வருவதையும் பார்த்தான். உடனே அவனுக்கு உடம்பில் உயிர் வந்தது: உள்ளத்தில் ஊக்கம் பிறந்தது; கால் கைகள் செயல் திறன் பெற்றன. யாழ்க் களஞ்சியத்தின் மறைவிலிருந்து தாவி வெளியில் பாய்ந்து செல்ல முயன்றான்.

அச்சமயம் பின்னாலிருந்து அவனுடைய கழுத்தில் வஜ்ராயுதத்தையொத்த ஒரு கை சுற்றி வளைத்துக் கொண்டது. அண்ணாந்து நோக்கினான். காளாமுகக் கோலங் கொண்ட ஓர் ஆஜானுபாகுவான உருவம் கண் முன்னே தெரிந்தது. ஆகா! இவன் யார்? இங்கு எப்படி வந்தான்! இது என்ன இரும்புப் பிடி? கழுத்து நெரிகிறதே! மூச்சுத் திணறுகிறதே! விழி பிதுங்குகிறதே! இன்னும் சில கணநேரம் போனால், உயிரே போய் விடுமே....! வந்தியத் தேவன் ஒரு பெரு முயற்சி செய்து அந்த இரும்புக் கையின் பிடியைத் திமிறித் தளர்த்திக் கொண்டு வெளியில் பாய்ந்தான். பாய்ந்த வேகத்தில் தரையில் விழுந்தான். தலையிலே ஒரு பெரிய பாறாங் கல்லைப் போட்டது போல் இருந்தது. ஒரு கணம் அவன் கண்களின் முன் கோடி சூரியர்கள் கோடானுகோடி கிரணங்களைப் பரப்பிக் கொண்டு பிரகாசித்தார்கள். அடுத்த கணத்தில் அவ்வளவு சூரியர்களும் மறைந்தார்கள். நாலாபுறமும் இருண்டு வந்தது. வந்தியத்தேவன் அக்கணமே நினைவை இழந்தான்.

• • •

**யா**ழ்க் களஞ்சியத்திலிருந்து, அதன் வாசலில் கிடந்த வந்தியத்தேவனுடைய உடலை மிதித்துத் தாண்டிக் கொண்டு ஒரு கோர பயங்கரமான காளாமுக உருவம் வெளிப்பட்டது.

யாழ்க் களஞ்சியத்தின் அருகில் தடால் என்ற சத்தத்தைக் கேட்டு நந்தினி திரும்பிப் பார்த்தாள். காளாமுக உருவம் கையில் கத்தியை உருவிக் கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கண்டாள். விழிகள் பிதுங்கும்படியான வியப்புடன் அந்த உருவத்தை நோக்கினாள். அவள் வயிற்றிலிருந்த குடல்கள் மேலே ஏறி மார்பையும் தொண்டையையும் அடைத்துக் கொண்டதாகத் தோன்றியது. கண்களைத் துடைத்துக் கொண்டு, எதிரே பார்த்தாள். கரிகாலன் கீழே விழுந்து கிடக்கக் கண்டாள். அவன் உடலில் வீர பாண்டியனுடைய வாள் பாய்ந்திருந்ததையும் கண்டாள்.

அப்போது அவளுடைய தொண்டையிலிருந்து விம்மலும் சிரிப்பும் கலந்த ஒரு பயங்கரமான தொனி எழுந்தது. அது அந்த அறையிலிருந்த கட்டில் முதலிய அசேதனப் பொருள்களைக்கூட நடுங்கும்படி செய்தது.

"அடி பாதகி! சண்டாளி! உன் பழியை நிறைவேற்றி விட்டாயா?" என்று கூறிக் கொண்டே காளாமுக உருவம் அவளைமேலும் நெருங்கிவந்தது.

அதே சமயத்தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவின் வழியாக உள்ளே நுழைந்த புலி உருவத்தின் மறைவில் ரவிதாஸனும் பிரவேசித்தான். காளாமுகனைப் பார்த்தவுடனே புலியைத் தூக்கி வீசி எறிந்தான். அந்த அறைக்கு இலேசாக வெளிச்சம் தந்து கொண்டிருந்த விளக்கை அந்தச் செத்த புலியின் உடல் தாக்கியது.

விளக்கு அறுந்து விழுந்தது.

அது அணைவதற்கு முன்னால் ஒரு கண நேரம் மணிமேகலையின் பயப் பிராந்தி கொண்ட முகத்தைக் காட்டியது.

'கிரீச்'சென்று கூவிக் கொண்டு மணிமேகலை அங்கிருந்து ஓடினாள்.

அறையில் காரிருள் சூழ்ந்தது.

அந்தக் காரிருளில் சோகந் ததும்பிய விம்மல் குரலும் வெறி கொண்ட சிரிப்பின் ஒலியும் மரணத்தறுவாயில் கேட்கும் முனகல் ஓசையும் மனிதர்கள் விரைந்து அங்குமிங்கும் ஓடும் காலடிச் சத்தமும் கலந்து கேட்டன. (தொடரும்)

---

### பாம்புக் காவல்!

டல்லஸ் என்னும் இடத்திலுள்ள குளிர் பதன சாதனங்கள் விற்கும் அமெரிக்கக் கம்பெனி ஒன்று அடிக்கடி திருடர்களால் சூறையாடப்பட்டது.

"பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்" என்னும் பழமொழியை நினைவு கூர்ந்து கடைக்குள் இரவு நேரங்களில் பாம்புகளை விட்டு வைத்தது அந்தக் கம்பெனி. பாம்புகளை விட்டு வைத்ததன் பலன், திருட்டு அறவே நின்று போயிற்று. காவல் நாய்களுக்காவது நாலு காசு செலவழிக்க வேண்டும். இதற்கு அது கூடத் தேவையில்லையே! 'நாய்கள் ஜாக்கிரதை'க்குப் பதிலாகப் 'பாம்புகள் ஜாக்கிரதை' பலகை தொங்க விட்டார்கள். நாளடைவில் இது மற்றக் கடைகளுக்கும் பரவவே காவல் துறையினர் இது சட்ட விரோதம் என்றனர். இருந்தாலும் ஆமிரும் இப்பூவுலகில் சட்டத்தை மதிப்பவர்கள் குறைவுதானே? எனவே 'இனி திருடர்கள் துப்பாக்கிக்குப் பதில் கிளைகளை எடுத்துச் சென்றால் வியப்பதற்கில்லை' என்று கூறுகிறது 'டைம்' என்னும் பத்திரிகை.



# பாம்புக்குப்

இந்தப் பக்கம் :

1. பாம்புப் பண்ணை நடத்தும் விட்டேகர் பாம்பிலிருந்து விஷத்தை எடுக்க முன்னேற்பாடுகளைச் செய்கிறார்.

2. படமெடுத்தாடும் பயங்கரப் பாம்புகள்.

அடுத்த பக்கம் :

3. பாம்பு விஷம் கண்ணாடிப் பாத்திரத்தில் இறங்கப் போகிறது.

4. சேலையூர் பாம்புப் பண்ணை.

படங்கள் : கஜராஜ். பு.எஸ்.ஐ.எஸ்.

★

"**யா**ர் சொன்னது, பாம்புக்குப் பால் வார்க்கலாம் என்று? 'பாம்புக்குப் பால் வார்த்தாற் போல' என்பது எத்தனை நாளையப் பழமொழி! வேலியில் போகும் ஓணானை மடியில் கட்டிக் கொள்ளும் கதையாக அல்லவா ஆகிவிடும், பாம்புக்குப் பால் வார்த்தால்!"

பழமொழி பகரும் விடை இது.

ஆனால் இரு ரோமுலஸ் விட்டேகர் அளிக்கும் விடை:

"பாம்புக்குப் பால் வார்க்கலாம்; தாராளமாக வார்க்கலாம், அது குடிக்குமானால்....."

"பகவின் மடியிலிருந்தே பாம்புகள் பாலை உறிஞ்சுவதாகச் சொல்லிக் கேட்டிருக்கிறோமே!"

"எத்தனையோ சொல்லக் கேட்டிருக்கிறோம். அவற்றில் சில உண்மை; சில வழி வழி வந்த நம்பிக்கை."

இப்படி அடித்துச் சொல்லும் இந்த விட்டேகர் யார்? கேட்கத் தோன்றுகிறதல்லவா?

1943ம் ஆண்டு பிறந்த இவர் ஓர் அமெரிக்க இளைஞர். தமது சிறு பிராயத்தில் 1953ம் ஆண்டு தம்மைப் பெற்றவருடன் இந்தியாவுக்கு வந்தார். படிப்புக்காகக் கோடைக்கானல் பள்ளியில் சேர்ந்தார். ஆனால் பாம்போடு பழகலானார்.

இந்தியாவிலிருந்து மேற்படிப்புக்காக அமெரிக்கா சென்றும் இவரைப் பாம்போடு பழகும் ஆர்வம் விடவில்லை. மியாமி பாம்புப் பண்ணையில் வில்லியம் ஹாஸ்ட் என்பவருக்கு உதவியாளராகப் பணியாற்றிப் பாம்புகளைப் பற்றியும் அவற்றின் இயல்புகளைப் பற்றியும் தெரிந்து கொள்ளலானார். அங்கு பெற்ற அநுபவம் இவரை மீண்டும் இந்தியாவுக்கே திரும்பச் செய்தது. காரணம், உலகத்திலேயே இந்தியாவில் தான் பாம்புகளின் வகை அதிகம்.



"போயும் போயும் உங்களுக்குப் பாம்பு வளர்க்க வேண்டும் என்று எப்படி ஆசை தோன்றியது?"

கழுத்து உயரத் தோள் பட்டைகள் குலுங்க இரு கைகளையும் விரித்துக் குறுநகையுடன் அவர் கூறிய பதில்: "நாய், பூனை, கோழி, கிளி என்று மட்டும் பிறருக்கு வளர்க்கத் தோன்றலாமோ?"

"பாம்பைக் கண்டால் படையும் அஞ்சுமே!"

படை அஞ்சலாம். ஆனால் விட்டேகர் அஞ்சவில்லை. அதோடு அவர் கூறுகிறார்:

"என் அஞ்சாமை ஓர் அஞ்சாமையா? உங்கள் பக்கத்து இருளர்களைப் பாருங்கள்! பாம்பாட்டிப் பிழைப்பே நடத்துகிறார்கள். சொல்லப் போனால் எனது இந்த அஞ்சாமைக்குப் பாடம் சொல்லித் தந்தவர்கள் அவர்களே. அதோடு பாம்பின் வகைகளையும் அவற்றின்

இயல்புகளையும் பழகு முறைகளையும் எனக்கு இனங்காட்டிக் கொடுத்தவர்கள்.''

சென்னையிலிருந்து வேளச்சேரி சாலையில் தாம்பரம் சென்றால், தாம்பரத்தை நெருங்குவதற்கு முன் சேலையூர் என்ற ஓர் ஊர் வருகிறது. அங்குதான் இருக்கிறது விட்டேகரின் பாம்புப் பண்ணை.

எங்கு பார்த்தாலும் பாம்புகள் நெளிந்து கொண்டிருக்குமோ என்று அஞ்சி அடி எடுத்து வைக்க வேண்டியதில்லை. தைரியமாகப் பண்ணைக்குள் போனால், இடுப்பு உயரம் சுவர் எழுப்பி சிமெண்ட் பூசிய பல எட்டு அடிப் பள்ளங்களைக் காண்போம்.

எட்டிப் பார்த்தால் நடுவில் பசுமையாகக் காட்சி தரும் சில செடி கொடிகள். ஓர் ஓரத்தில் நீர்த் தொட்டிகள். இங்கும் அங்கும் பல்லிகள், அரணைகள், ஓணான்கள் என்று பல்வேறு ஊர்வன காட்சி தருகின்றன.

மற்றும் சில இடங்களில் மண் கலயங்களைத் தரையோடு புதைத்து அவற்றின் மேல் செங்கற்களை அடுக்கி வைத்திருக்கிறது. இடுக்கு விட்டுச் சற்றுத் தாறுமாறாக.

''இரக்க சிந்தை படைத்த இயற்கையின் விநோதத்தைப் பார்த்தீர்களா, உயிரினங்கள் தற்காத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக அவற்றின் வண்ணத்தையும் உருவத்தையும் எப்படிப் படைத்திருக்கிறது என்று!''

# பால் வார்க்கலாம்



இப்படிக் கேட்டவாறே விட்டேகர் ஒரு குழியில் குதிக்கிறார். அவர் கையில் முனை வளைந்த ஒரு கொம்பு இருக்கிறது. அவர் காட்டும் இடத்தில் கண் போன பின்புதான் அங்கு ஒரு பச்சை ஓணான் அமர்ந்திருப்பது தெரிகிறது. இலைப் பச்சைக்கும் அதன் பச்சைக்கும் வேறுபாடே தெரியவில்லை.

''பச்சோந்தி நிறம் மாறுமென்று சொல்வார்களே!''

''மெய்தான்; இது பச்சோந்தி இல்லை; ஓணான்!'' இப்படிக் கூறும் விட்டேகரின் காலடிகளில் ஓர் அரணை ஓடுகிறது!

'அரணை கடித்தால் அரை நிமிஷம்; பல்லி கடித்தால் பத்து நிமிஷம்!' என்பார்களே, இந்த மனிதர் இப்படிப் போய் அரணையின் வாய் அடியில் நிற்கிறாரே! நமக்குப் பதறுகிறது.

''இந்தக் கணக்கு நமக்கு அல்ல; அவற்றுக்குத்தான். கடித்துவிட்ட பீதியில் அவற்றை நாம் நீர்த்துக்கட்டி விடுவோம், அந்தக் குறித்த நேரத்துக்குள்ளாக. அப்பழமொழிதான் இப்படிப் பொருள் மாறி வழங்கியிருக்க வேண்டும்!''

பழமொழிக்கு இந்தப் புது விளக்கம் அரணைக்கும் பல்லிக்கும் விஷம் இல்லை என்பதைக் கூறாமல் கூறுகிறது.

விட்டேகர் கூறுகிறார்:

''இந்தியாவில் ஏறக் குறைய இருநூறு வகைப் பாம்புகள் இருக்கின்றன. அவற்றில் விஷமுள்ளவை நான்கே நான்குதாம். பாம்புகள் எல்லாமே பயந்த சுபாவம் படைத்தவை. வலியச் சென்று யாரையும் கடிப்பதில்லை. தனக்கு ஆபத்து என்னும்போதுதான் தற்காப்புக்காகக் கடிக்கின்றன. உருவத்தால் ஒருமைப்பாடு காணப் போய் விஷமுள்ளவை இல்லாதவை எல்லாமே ஆபத்துக்கு இலக்காகின்றன. மக்களும் 'பாம்புக்கு ராஜா மூங்கில் தடி' என்னும் சமதர்மக் கொள்கையைக் கடைப்பிடித்து விடுகிறார்கள்!''

கருட்டைப் பாம்புகள் கிடந்த குழியில் இறங்கி அவற்றை எடுத்துக் காட்டுகிறார். இது நச்சரவு. கருட்டைப் பாம்பை வேறுபடுத்தி இனம் காண்பது வெகு எளிது. காரணம், அது அவ்வளவு சுருள்கிறது.

அடுத்தபடியாகப் பச்சைக் கொடிகள் வளர்ந்த பள்ளத்தில் இறங்குகிறார். அவர் காட்டிய பின்தான் அதில் பச்சைப் பாம்புகள் இருப்பதை நன்றாகக் காண்கிறோம். அதன் முகப் பகுதிதான் எத்தனை கூர்மையானது! 'பச்



சைப் பாம்பு கண்ணைக் குத்தும்.' — படித்தது நினைவுக்கு வருகிறது.

''கண்களைக் குத்துகிறதல்லவா?'' என்று கூறி ஒரு பச்சைப் பாம்பைக் கையில் எடுக்கிறார். அதன் வாய்ப் பகுதியைக் கையால் நீவிவிடுகிறார். என்ன மென்மை! இளந் தளிர்போல! இதுவா நம் கண்களைக் குத்தும்? நம் கண் பார்வைதான் இதன் முகத்தைக் கொத்துகிறது!

பிறகு...? கட்டு விரியன், கண்ணாடி விரியன் போன்ற பாம்புகளைக் காட்டுகிறார். கட்டு விரியன் மிதித்தால்தான் கடிக்கும் என்று நமக்கு எடுத்துக் கூறுகிறவர் நல்ல வேளையாக அதை மிதித்துக் காட்டவில்லை!

மகுடிக்குக் கட்டுண்ட நாகமென அவர் இழுத்த இழுப்புக்கு வளைந்து கொடுக்கும் நல்ல பாம்பைப் பார்க்கப் போகிறோம். மண் கலயத்தில் மூடியிருந்த கற்களை அகற்றி விட்டுக் கையில் இருந்த குறட்டால் பாம்பைத் தூக்கிக் கீழே விடுகிறார் விட்டேகர். அது உடனே ஓடி மண் கலயத்துக்குள் புகுந்து கொள்ளுகிறது. திரும்பவும் எடுத்து விடவே சீறிப் படமெடுக்கிறது! நாகத்தின் சீறலை நேருக்கு நேர் கேட்கும்போது...

நல்ல பாம்பு எத்தனை அடி உயரமாகப் படமெடுத்து நிற்கிறதோ, அத்தனை தூரம் தள்ளி — இல்லை; இன்னும் சற்றுத் தள்ளி— நின்றுகொண்டு உரையாடுகிறார் விட்டேகர்! படம் எடுக்கும் பாம்பு கொத்தத் தீர்மானித்துப் படத்தைக் கீழே போட்டாலும் அதனால் கடிக்க முடியாத அளவுக்கு அது பத்திரமான தொலைவு. நெருங்கினால்தான் ஆபத்து. அதுவும் கடிக்கத் தயங்காது.

நாங்கள் பேசிக் கொண்டிருந்த அத்தனை நேரமும் ஆடாமல் அசையாமல் எச்சரிக்கையாக அது நின்றது! பூமியைத் தாங்க ஆதிசேஷனை நியமித்தது சரிதான் என்று சொல்வது போலிருந்தது அதன் செய்கை.

''மகுடிக்கு மயங்கி நாகம் படம் எடுத்து ஆடும் என்கிறார்களே!''

''கட்டுக் கதை. பாம்புக்குக் கண்தான் செவி.''

பாம்பைத் தமிழில் கட்செவி என்பார்கள். வடமொழியில் ''சக்ஷு ச்ரவா'' என்பார்கள்! இது நம் நினைவுக்கு வருகிறது.

விட்டேகர் தொடர்கிறார்:

''எதிரே இருக்கும் நபரால் தனக்குத் தீங்கு நேருமோ என்று அஞ்சியே அது படமெடுத்து நிற்கிறது. அவனது அசைவுகளுக்கு ஏற்ப அது ஆடவும் செய்கிறது.''

எங்கள் பேச்சுக்குப் பின்னணியாக இனிய இசை ஒலி எழுப்பிக் கொண்டிருந்த ஒரு குருவி திடீரென்று பீதியில் கிரீச்சிடுகிறது. தொட்டியின் விளிம்பில் உட்கார்ந்திருந்த அது அடிவாரத்தில் பாம்பைப் பார்த்துவிட்டுத்தான் அப்படி அலறியது போலும்!

அந்தப்புறம் பார்வையைத் திருப்பிய விட்டேகர் கூறுகிறார்: ''இது போன்ற அச்சக் குரல்கள்தாம் எங்களுக்குப் பாம்பின் இருப்பிடத்தைக் காட்டிக் கொடுக்கின்றன. அமெரிக்காவில் கிலுகிலுப்பைப் பாம்பு என்று ஒன்று. அதுவும் நச்சுப் பாம்பு. அச்சத்தில் கிலுகிலுப்பை போன்ற ஒலி எழுப்பித் தன்னைக் காத்துக் கொள்ள முயலும் அதே நேரத்தில் நம்மையும் எச்சரித்து விடுகிறது.

''வயல் வெளிகளில் எலி உபத்திரவம் அதிகம் இருக்குமானால் அங்கே பாம்புகள் அதிகம் இருக்கும். பாம்புகளுக்கு இரை எலிகள். இந்த இரகசியத்தை அறிந்த பாம்பாட்டிகள் பாம்பு பிடிக்க வேண்டுமானால் வயற்காட்டைத்தான் நாடுகிறார்கள். பாம்புகள் ஊர்ந்த தடத்தைக் கொண்டு பாம்பு எங்கு போயிருக்க வேண்டும் என்பதையும் கண்டு கொள்ளுகின்றனர்.''

இதைக் கேட்டதும் மனம் இப்படிக் கணக்குப் போடுகிறது: 'தானியக் கதிர் சேதமடையக் கூடாது என்றால் பாம்புகளைக் கொல்லக் கூடாது. எலிகளின் உபத்திரவத்திலிருந்து தப்ப இதுவே சிறந்த வழி!'

''பாம்புகளையும் முதலைகளையும் தோலுக்காக வேட்டையாடக் கூடாது என்று அரசு தடைவிதித்திருக்கிறது'' என்கிறார் விட்டேகர்.

''சரி, பாம்புகள் இருந்து விட்டுப் போகட்டும். இப்படி ஒரு பாம்புப் பண்ணை நிறுவுவானேன்?''

''விஷம் எடுக்க. இந்த விஷத்தைக் கொண்டு கொடிய புற்றுநோய்க்கு விடிவு காண முயன்று வருகிறார்கள். விஷ முறிவு மருந்தாகவும் இது பயன்படுகிறது!''

இந்தப் பாம்புகளிடமிருந்து வாரத்துக்கு ஒரு முறை விஷம் எடுக்கிறார் விட்டேகர். கண்ணாடிப் பாத்திரத்தில் 'ரப்பர் டெக்ரான்' என்னும் துணி கட்டிப் பாம்புகளைக் கடிக்க விடுகிறார். கண்ணாடிப் பாத்திரத்தில் நஞ்சு சேருகிறது. அதை ரசாயன முறையில் பக்குவப்படுத்திப் பொடியாக்கி பம்பாயில் உள்ள சோதனைச் சாலைக்கு அனுப்பி வைக்கிறார். வெளி நாடுகளில் இதற்குக் கிராக்கி அதிகம். ஆனால் சிவப்பு நாடா முறையும் லைசென்ஸ் விதிகளும் பாம்பாகப் படம் எடுத்துக் குறுக்கே நிற்கின்றன. விட்டேகர் பாம்புகளின் இயல்புகளையும் பழகு முறைகளையும் கிட்ட இருந்து கண்டு ஆங்கிலத்தில் நூல் எழுதும் முயற்சியையும் மேற்கொண்டிருக்கிறார்.

விட்டேகர் ஓர் அறைக்கு இட்டுச் செல்கிறார். அங்கு நட்டுவாக்கிளிகளும், வேறு சில விநோதப் பாம்புகளும் இருக்கின்றன. நட்டுவாக்கிளியின் விஷமும் சேமிக்கிறதாகக் கூறியவர் உள்ளே சென்று ஒரு மரப் பெட்டியைத் திறந்து மலைப் பாம்பை எடுத்து வருகிறார். அதன் அடிப்பாகத்தைத் தடவிக் கொடுத்தவாறே, ''பாருங்கள்! என்ன வழுவழுப்பு! என்ன சுத்தம்! என்ன தண்மென்ற சில்லிப்பு!'' என்று புகழுகிறார். ''பாம்புக்கு வியர்ப்பதில்லை. எனவே அழுக்குச் சேர்வதில்லை. பாம்புகள் நல்லவை; அன்பு செலுத்தத் தக்கவை!'' என்றும் மெச்சுகிறார்.

தொட்டுப் பார்த்தால் அல்லித் தண்டு தான்! இல்லாமலா, ஆதிசேஷனைப் படுக்கையாக மகா விஷ்ணு கொண்டார்? பிறை சூடிய பித்தன் கை, கழுத்து, இடுப்பு, தலை எல்லா இடங்களிலும் பாம்புகளையே பூஷணமாகச் சூட்டிக் கொண்டான்!

'அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் விஷம்' என்பார்கள். மாறாக அளவிற் குறைந்த நஞ்சு அமுதமாகி உயிர் காக்க உதவும் என்பதை விட்டேகரிடம் தெரிந்து கொண்டு விடை பெறுகிறோம்.

— ரா. வீழிநாதன்

போகுமிடமெல்லாம்
பொங்கிடும் அழகு
பொலிந்திட அணிவீர்...

# மபத்லால் சேலைகள்

மபத்லால் சேலைகள், சீராடும் பேரணி
சிந்தை குளிர்ந்திடும் பிரிண்ட்கள்,
விந்தை மிகுந்திடும் வண்ணங்கள்,
உன்னதமான காட்டன், 100%
பாலியஸ்டர் மற்றும் கலவைத்
தினுசுகள்!



MFAS-11 TB


லைப்பாய்
இருக்குமிடம்: அதுவே
ஆரோக்கியம்
இருக்குமிடம்
லைப்பாய் ஸ்நானம்-
பொழுதெல்லாம் தூய்மை-
புத்துணர்வோடு புதுமைப்
பொலிவு... பூரிக்கும் ஆரோக்கிய
நல்வாழ்வு- அளிப்பது லைப்பாய்.
அழுக்கிலுள்ள கிருமிகளைக்
கழுவிக் களைவது
லைப்பாய்
LIFEBUOY
for health

# டில்லிக்குப் போறோம்; வாரீயளா?

இந்த நாடகத்தைப் பார்க்கிறவர்கள், "இந்தக் காலத்திலகூட இப்படியும் நடக்குமா? இவ்வளவு அப்பாவித்தனமான மக்கள் இன்னமும் இருக்கிறார்களா?" என்று கேட்கலாம்.

ஆனால் அந்த அப்பாவித்தனமான மக்களை வைத்துத்தான் நாடகமே எழுதப்பட்டிருக்கிறது. நாடகத்தின் உட்கருத்தே அப்பாவித்தனம்தான்!

பட்டிக்காட்டுத் திருவேங்கடம் ஐ. ஏ. எஸ். பரீட்சையில் தேறி டில்லியில் உயர் பதவி வகிக்கிறான். டில்லியில் அவன் தனியா யிருந்தால் கெட்டுப் போய்விடுவான் என்ற எண்ணத்தோடு, அவனுக்கு ஒரு கால்கட்டுப் போடத் தீர்மானித்து அவனை வற்புறுத்தி வருகின்றனர் பெற்றோர். அவன் அதைத் தட்டிக் கழித்துக் கொண்டே வருகிறான். கடைசியில் 'நீ உடனே புறப்பட்டு வராவிட்டால் நான் தற்கொலை செய்துகொண்டு விடுவேன்' என்று அவன் தகப்பனார்



எழுதிய கடிதம் கண்டதும் திருவேங்கடம் உடனே புறப்பட்டு விடுகிறான். ஊருக்கு வந்ததும் மீண்டும் விவாகப் பேச்சைக் கேட்டதும் குதி குதியென்று குதிக்கிறான். கடைசியில் மிரட்டலுக்கும் பணிந்து முறைப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு விடுகிறான். இவ்வளவு முரண்டு பிடித்தவன் எப்படி அந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணை மணந்து கொண்டதோடு அவளோடு டில்லிக்கு விமானப் பிரயாணம் செய்து தனிக் குடித்தனம் செய்யும் அளவுக்குத் தயாரானான் என்பதைப் புரிந்துகொள்வது சற்றுக் கடினம்தான்!

பட்டிக்காட்டு மனைவி தன்னோடு நாகரிகமாக வாழவில்லை என்ற காரணத்துக்காக அவளைச் சில நாட்களில் கிராமத்துக்கே அழைத்து வந்து தள்ளி விட்டுப் போய்விடும் திருவேங்கடத்துக்கு மீண்டும் ஓர் அதிசயம் காத்திருக்கிறது. பட்டிக்காட்டுப் பெண்ணை அழைத்துக் கொண்டு அவன் தகப்பனார் ஒரு பெரிய பரிவாரத்துடன் டில்லிக்கு வந்து சேருகிறார்!

மேடையை இருட்டாக்கிவிட்டுப் பட்டிக்காட்டு மக்களின் விமானப் பிரயாண வைபவத்தை அவர்களின் நகைச்சுவை கலந்த உரையாடல்கள் மூலமாகவே விளக்கி யிருக்கும் உத்தி மிகவும் சுவையானது!

பழைய படமான "அன்னி"யில் சிறுவனாக நடித்துப் புகழ்பெற்ற சேது திருவேங்கடமாக நடிக்கிறார். கோபமும் தாபமும் அப்பாவித்தனமும் அவர் நடிப்பில் ஒருங்கே வெளிப்படுகின்றன. மிகவும் இயல்பான நடிப்பு. பட்டிக்காட்டு அலமேலுவாக நடிக்கும் சந்திரகாந்தா முற்பகுதியில் அசல் பட்டிக்காட்டு அப்பாவிப் பெண்ணாகவே மாறிவிட்டார். பிற்பகுதியில் நவநாகரிக மங்கையாக மாறி, 'அடி ஆத்தி!' என்ன போடு போட்டுவிட்டார்! இன்டர்வெல்லுக்கு முன்பு அவரிடமிருந்த அசட்டுத்தனமும், பண்டைய நடை உடை, பாவனைகளும், 'இன்டர்வெல்'லுக்குப் பின்பு எங்கேதான் போய் ஒளிந்து கொண்டு விட்டனவோ! இரு வேறு பாகங்களிலும் இணையற்ற நடிப்பு!

திருவேங்கடத்தின் தகப்பனார் பாகம்தான் நாடகத்தின் ஜீவநாடி. அசல் பட்டிக்காட்டு ஆசாமியான அந்தப் பாத்திரத்தை ஏற்ற சண்முகசுந்தரம் ஜமாய்த்து விட்டார். நாடகத்தில் அவர் வரும் காட்சிகளெல்லாம் கலகலப்பாயிருந்தன. பட்டிக்காட்டு ஆசாமி மாதிரி வேஷம் புனைவது ஒன்றும் சிரமமில்லை. ஆனால் நடிக்கவேண்டுமே! சண்முகசுந்தரம் பாராட்டுக்குரியவர்.

கிராமத்து மணியக்காரர், நாயர், சாயபு ஆகிய பாத்திரங்களை ஏற்றவர்கள் அடிக்கடி மேடையில் தோன்றி நகைச் சுவையை வாரி வாரி வழங்கினர்.

நாடக ஆசிரியர் உசிலை சோமநாதன் வசனங்களை நறுக்குத் தெறித்தாற்போல் காட்சிக்குக் காட்சி அமைத்திருக்கிறார். ஆரம்பக் காட்சிகளில் பட்டிக்காட்டுத்தனத்தை அதிகமாக விவரித்தவர், பிற்பகுதியில் அதாவது பட்டிக்காட்டு அலமேலு நாகரிக நங்கையாக மாறிய பிறகு சடக்கென்று முடித்துவிட்டார். நவநாகரிக மோகம் கொண்ட கதாநாயகன், அனுபவப்பட்ட பிறகு, பழைய பட்டிக் காட்டு அலமேலுவையே பார்க்க விரும்பும் சம்பவங்கள் விறுவிறுப்பானவை. பட்டிக்காட்டுப் பெண்ணாக இருந்து இந்தியா தேசப் படத்தைப் பார்த்த போது, 'அடி ஆத்தி! இது என்ன?' என்று வியந்ததும், இறுதிக் காட்சியில் அதே தேசப் படத்தின் முன்னால் நின்று பரவசம் ஊட்டிய விதமும் நினைவில் இடம் பெறுபவை.

ஒரு சிறிய கருத்தை வைத்துக் கொண்டு யாவரும் சிரித்து மகிழும் வண்ணம் நல்லதொரு நகைச் சுவை நாடகத்தை அளிக்கின்றனர், சிவகாமி கலை மன்றத்தினர்.

- காந்தன்



# அத்தியாயம் 14

திராட்சைக் கொடி வீட்டின் ஒவ்வொரு ஜன்னலும் திறக்க முடியாதபடி உள்பக்கமாகக் கொக்கிகளைப் போட்டு இறுக்கமாக மூடப் பட்டிருந்தன. உடைந்த ஜன்னல்களின் மீது குறுக்கும் நெடுக்குமாகப் பலகைகளை வைத்து ஆணி அறைந்து இறுக்கப்பட்டிருந்தன. சேகர் ஒரு ஜன்னலின் இடுக்கு வழியாக உள்ளே ஏதாவது தெரிகிறதா என்று பார்த்தான். உள்ளே எதையும் புலப் பட வைக்காததோர் இருள் குமைந்திருந்தது.

திராட்சைக் கொடி வீட்டினுள் நுழைவதற்கான கதவினருகிலிருந்து மஞ்சுளா சலிப்போடு கூறினாள்: ''ஆச்சரியமாக இருக்கிறதே. இந்த வீட்டின் கதவில் உள்ள பூட்டுக்குச் சாவி இது தான். எனக்கு அதில் சந்தேகமே இல்லை. ஆனால் இந்தச் சாவியினால் இந்தப் பூட்டைத் திறக்க முடியவில்லையே?''



அதே சமயம் கோபாலின் குரல் எங்கிருந்தோ ஒலித்தது. ''இது என்னது?'' குரல் வந்த இடத்தை மஞ்சுளாவும் சேகரும் தேடிச்சென்றபோது கோபால் ஒரு பெரிய ஜன்னலின் மீது வலது காதைப் பதித்தபடி எதையோ உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தான்.

கோபாலின் செயலைச் சேகரும் பின் பற்றிய போது அவனிடமிருந்து பிறந்த வார்த்தை இவைதாம்: ''உள்ளே ஏதோ ஓசை... ஏதோ யந்திரத்தின் ஒலி...ம்... இப்போது நின்று விட்டது.''

''கிணற்றுக்குப் பொருத்தியுள்ள மின்சார பம்பின் ஒலியாக இருக்கும்'' என்றாள் மஞ்சுளா. ''இந்தத் திராட்சைக் கொடி வீட்டின் அடியில் ஒரு பெரிய கிணறு இருக்கிறது. அதிலிருந்து மோட்டார் மூலம் நீர் இந்தப் பண்ணையின் பல பகுதிகளுக்கும் போகிறது. ஒருவேளை அந்த மோட்டாரை இயக்கி நிறுத்தும் ஒலியாக இருக்கலாம் அது!''

சேகரின் பார்வை அந்த வீட்டின் சுற்றுப்புறத் தரையை உன்னிப்பாக ஆராய்ந்து கொண்டிருந்தது. ஒற்றைச் சக்கர வண்டியின் சக்கரத் தடம் ரொம்பத் துல்லியமாகத் தெரிந்தது. தோட்ட வேலை செய்பவர்கள் மண்ணை அள்ளிக் கொண்டு போக உபயோகப்படும் 'வீல் பாரோ' என்ற சாதனத்தின் தடம் அது என்பதை உணரச் சேகருக்கு அதிக நேரமாகவில்லை. முதல் நாள் கேட்ட விநோத ஒலியும் அதைத் தொடர்ந்து வேலப்பனின் சந்திப்பும் சேகருக்கு நினைவுக்கு வந்தன. அந்த வண்டித் தடத்தோடு சேகரின் பார்வை நீண்டது. தூரத்தில் தெரியும் கட்டிடங்களை எட்டிப் பிடித்து ஒரு கட்டிடத்தின் பின்னே மறைந்து மறுபடியும் சரிவிலே இறங்கி மறைந்தது அந்த நீண்ட நெடுங் கோடு.

''இதன் வழியாகச் சென்று நான் பார்க்க விரும்புகிறேன்'' என்றான் சேகர். அதன்படியே நடக்கவும் ஆரம்பித்துவிட்டான். அந்த ஒற்றைச் சக்கர வண்டித் தடம் ஓர் இடத்தில் அவனைத் திகைக்க வைத்துவிட்டு மறைந்தேவிட்டது. அதனால் சேகர் சோர்ந்துவிடவில்லை. அலைபாயும் அவன் கண்கள், அந்த 'வீல் பாரோ' வையே ஒரு கட்டிடத்தில் கண்டு பிடித்து விட்டது. அது கருவிகளைச் செப்பனிடும் கூடம்—'டூல் ஹவுஸ்' —சேகரின் கண்கள் வியப்

கௌசிகன்

பாக் நிறுத்தி நிற்கும்படியாக வேலப்பன் அங்கே அந்த வண்டியின் சக்கரத்துக்கு எண்ணெய் போட்டுக் கொண்டிருந்தான் — அது நாராசமாக ஒலி எழுப்புவதைத் தடுக்க.

சேகருக்கு வண்டித் தடத்தின் முடிவு ஏமாற்றமாகத்தானிருந்தது. ஆனால் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் மேலே நடந்தான். அடுத்த கட்டிடத்தை நோக்கி மௌனமாக. மஞ்சுளாவும் கோபாலும் அவனைப் பின் தொடர்ந்தார்கள். அந்தக் கட்டிடத்திலே ஏராளமான மின்சார 'ஸ்விட்ச் போர்டு'கள் இருந்தன. அந்தப் பண்ணை முழுவதற்குமான மின்சாரம் அங்கிருந்துதான் விநியோகிக்கப்படுகிறது போலும். பிரதான மின் இணைப்பு பூமிக்கடியிலிருந்து வந்திருந்தது. மிகச் சக்தி வாய்ந்த மின் ஓட்டத்திலிருந்து இந்த ஸ்விட்ச் போர்டுக்கு இணைப்பு வந்தது. டிரான்ஸ்பார்மர் அமைத்துப் பலவித கிளைகளாகப் பகுத்து அந்தப் பண்ணை முழுவதற்கும் மின்சாரம் விநியோகிக்கப்பட்டிருந்தது. இரட்டைத் தாமிர நாக்குகளோடு கூடிய ஸ்விட்ச்சுகள்; ஒவ்வொன்றிலும் அது எந்தப் பகுதிக்கு — பங்களாவுக்கான - இணைப்பு என்பதை அறிவிக்கும் ஒரு சீட்டு ஒவ்வொன்றிலும் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தது. திராட்சைக் கொடி வீட்டுக்கான ஸ்விட்ச் திறந்திருப்பது சேகரின் பார்வையிலிருந்து தப்பவில்லை. அந்தக் கட்டிடத்துக்கான மின் இணைப்பு துண்டிக்கப்பட்டிருந்தது.

''அதிசயம்!'' என்றது சேகரின் வாய். ''அங்கு நாம் கேட்ட ஒலி — மின்சார மோட்டார் — மின் தொடர்பு இல்லாமலே ஓடியிருக்கிறது!'' வியப்புடன் ஸ்விட்ச் போர்டின் அருகே சென்று, அதன் பின் பக்கம் பார்வையைச் செலுத்தினான் சேகர். திராட்சைக் கொடி வீட்டுக்குச் செல்லும் மின் தொடர்பின் ஸ்விட்சுக்குப் பின்னாலிருந்து தனியான ஒயர் மூலம் இணைப்புக்கான தொடர்பு உள்ளும்புறமுமாகத் தரப்பட்டிருந்தது. பிறகு அந்த ஸ்விட்ச் போர்டிடமிருந்து விலகி எட்ட வந்து நின்று சிந்தனையுடன் அதை நோட்டமிடலானான்.

சேகரின் செயல் மஞ்சுளாவின் நெற்றியில் சுருக்கங்களை ஏற்றியது. ''என்ன சேகர், ஏதாவது விபரீதமாக....?'' என்றாள் கவலையுடன்.

''ம்...'' என்றவாறு தன் முக வாயின் முரட்டுச் சருமத்தை விரல்களால் அநுபவித்தவாறே ''திராட்சைக்கொடி வீட்டுக்கான மின்தொடர்பு துண்டிக்கப் பட்டிருப்பதாகப் பிறர் நம்ப வேண்டும் என்று ஏன் இத்தனை சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றுதான் யோசிக்கிறேன். ஆனால் உண்மையில் அவ்வீட்டுக்கான மின் தொடர்பு துண்டிக்கப்படவில்லை'' என்றான் சேகர். அவன் பார்வை எதையோ கண்டறிவதில் தீவிரமடையலாயிற்று.

''சேகர்! நீங்கள் நினைக்கிறபடி அங்கு மர்மங்கள் ஏதும் இருக்காது என்றே நினைக்கிறேன்'' என்றாள் மஞ்சுளா. ''இருந்தாலும் நாம் மறுபடியும் அங்கு போவோம். அதன் உள்ளே எப்படியாவது புகுந்து சென்று ஆராயலாம்.''

இந்தச் சமயத்தில் மஞ்சுளாவின் சித்தி கோகிலாவும் அவள் அண்ணா டாக்டர் ரகுநாத்தும் வருவதைக் கண்டாள் மஞ்சுளா. தங்கள் அருகில் வருமாறு கோகிலா சைகை செய்தாள். ரகுநாத்தின் பார்வை கட்டளையிடுவது போலிருந்தது. டாக்டர் ரகுநாத் அவர்களைத் தாண்டி வேகமாக நடந்தார், கோகிலா பின்தொடர. மஞ்சுளா சித்தியின் கட்டளைப்படி நடக்க வேண்டிய நிலையில் இருந்தாள். அந்த இடத்தை விட்டு அவர்களை அப்புறப்படுத்தி அழைத்துக் கொண்டு போக வேண்டுமென்பதே கோகிலா, ரகுநாத் இருவரின் நோக்கமாக இருந்தது. சித்தியைத் தொடர்ந்து கொண்டே மஞ்சுளா கேட்டாள்:

''சித்தி, வந்து... திராட்சைக்கொடி வீட்டின் சாவிகள் இவைதானே? அப்படித்தான் இந்தக் கொத்துச் சாவியோடு இணைத்துக் கட்டித் தொங்கும் பித்தளைத் தகட்டில் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இந்தச் சாவியினால் இந்த வீட்டின் எந்தக் கதவையும் திறக்க முடியவில்லையே.''

''பூட்டுத் துருப்பிடித்துப் போயிருக்கலாம்'' என்றாள் கோகிலா சுருக்கமாக. உடனே தொடர்ந்து, ''மஞ்சு, என் அண்ணா உன்னிடம் ஏதோ முக்கியமான விஷயம் பற்றிப் பேச வேண்டுமென்று சொன்னான்'' என்றாள்.

டாக்டர் ரகுநாத், மஞ்சுளாவுக்கு மட்டுமல்ல, துப்பறியும் போலீஸ் இன்ஸ்பெக்டர் துரைசாமி அவர்களுக்கும்கூடச் சொல்வதற்கு முக்கியமான விஷயங்களை வைத்திருந்தார். துரைசாமியும் அவரது சகாக்களும் அப்போதுதான் அந்த இடத்துக்கு வந்தார்கள்; நிர்மலாவை அந்தப் பண்ணையின் வயல், தோப்பு, மூலை முடுக்கெல்லாம் தேடி அலுத்துப் போய். அவர்களின் காலணிகளிலெல்லாம் ஒரே சகதி. செருப்பு, பூட்ஸ் கால்களைத் தரையில்

மகன்: அப்பா! நான்தான் - ஹாஸ்டல்லேயிருந்து பேசறேன்! உடனே எனக்கு எழுபது ரூபாய் பணம் வேணும்!

தந்தை: டேய்! இதென்ன, ஸ்டேட் பாங்க்னு நினைச்சியா? டெலிபோன்லே நீ கேக்கிறப்போவெல்லாம் பணம் அனுப்ப?

- பாணன்



உதைத்துத் தட்டிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஏற்படுத்திய அந்தச் சத்தம் ரகுநாத்தின் முகத்தைக் கடுப்பாக்கியது.

''தயவு செய்து சத்தப்படுத்தாதீர்கள். இந்த வீட்டின் இந்தப் பக்கத்து மூலையில் மிகவும் மோசமான நிலையில் உள்ளதொரு நோயாளி இருக்கிறார். அவரது அமைதிக்குப் பங்கம் ஏற்படும் எதையும் நான் அனுமதிப்பதற்கில்லை. நீங்களெல்லாம் யார், எதற்காக இங்கு வந்து இப்படி யெல்லாம் நடந்துகொள்கிறீர்கள் என்பதெல்லாம் அவருக்குத் தெரியாது. அதைப் பற்றியெல்லாம் அவரிடம் விளக்கினால் அவரது உடல் நிலையை மேலும் பாதிக்கும் அளவுக்குக் கொண்டு போய்விடும். ஆகவே இதற்கு மேல் இங்கு நான் எதையும் அனுமதிக்க முடியாது. தயவு செய்து உங்களுடைய உபகரணங்களையும் உதவியாளர்களையும் அழைத்துக்கொண்டு உடனே இங்கிருந்து போய்விடுங்கள். என்ன நான் சொல்வதன் கருத்துப் புரிகிறதா?'' என்று படபடவென்று பேசி முடித்தார் டாக்டர் ரகுநாத்.

துப்பறியும் இலாகா அதிகாரியான துரைசாமி இத்தனை நேரமும் அசைவற்று அவரையே பார்த்துக் கொண்டிருந்தவர் ஒரு பெருமூச்சுடன், ''புரிகிறது டாக்டர்'' என்று மட்டும் கூறிவிட்டுத் தம் ஆட்களைப் பார்த்து, ''அந்தச் சாமான்களை யெல்லாம் டிரக்கில் ஏற்றுங்களப்பா'' என்று உத்தர விட்டார்.

டாக்டர் இப்போது தன் அடுத்த இலக்கான மஞ்சுளாவிடம் திரும்பினார். ''மஞ்சுளா! நீயுங்கூட உன் அப்பாவின் அமைதியைக் குலைக்கும் காரியங்களைச் செய்கிறாய். அவருடைய அறை ஜன்னலிலிருந்து, நீ இங்கும் அங்கும் ஏதோ காரியமாக அலைந்து கொண்டிருப்பதை அவர் பார்த்திருக்கிறார். அதைப் பற்றி உன் சித்தியிடம் கேட்டுத் துளைத்தெடுத்து விட்டார். அவரைச் சமாதானப்படுத்தி அமைதியாகப் படுத்துக் கொள்ளும்படி செய்வதற்குள் எங்களுக்குப் போதும் போதுமென்றாகி விட்டது. நானும் உன் சித்தியும் உன் அப்பாவை எப்படிப் பாதுகாத்து வருகிறோம் என்பதை விளக்கினால் புரியாது. அதிர்ச்சி தரும் எதுவும் அவரை அணுகிவிடக் கூடாது என்பதே எங்கள் கவலை. அமைதி ஒன்றினால்தான் அவரை வாழ வைக்க முடியும். உணர்ச்சிவசப்பட வைக்கும் எந்த நிகழ்ச்சிக்கும் அவர் உட்படக் கூடாது. எங்களோடு நீயும் ஒத்துழைப்பாய், ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்'' என்று ஒரு குட்டிப் பிரசங்கமே நிகழ்த்தினார் ரகுநாத்.

''என்னால் அப்பாவின் அமைதி கெடுகிறது என்றால் அதற்காக நான் ரொம்ப வேதனைப்படுகிறேன், டாக்டர் சார்.. என்னை மன்னித்துவிடுங்கள். எனக்கு இதைப் பற்றி...'' மஞ்சுளா பேசிக் கொண்டிருக்கும்போதே, 'த டா ல்' என்ற ஓசை எல்லாரையுமே திடுக்கிட்டுத் திரும்ப வைத்தது. துரைசாமியின் ஆட்கள் ஏதோ ஒரு சாமானை டிரக்கில் ஏற்றும்போது அது கைதவறி விழ அதனால் ஏற்பட்ட ஓசைதான் அது.

''மிஸ்டர் துரைசாமி! தயவு செய்து சத்தப்படுத்தாமல் இங்கிருந்து எத்தனை விரைவில் கிளம்ப முடியுமோ அத்தனை சீக்கிரம் கிளம்புங்கள்'' என்ற ரகுநாத்தின் குரலில் தயவே இல்லை.

''இதோ நாங்கள் இப்பொழுதே கிளம்பி விட்டோம் டாக்டர். ம்.... எங்கள் வேலையும் முடிந்து விட்டது. அவன் இங்கு எங்குமே இல்லை'' என்று நிதானமாகக் கூறிவிட்டு வண்டியில் ஏறிக் கொண்டார்.

முல்லைவனம் ஜமீன்தார் தர்மலிங்கம் அவர்களின் சவ அடக்கம் ஆடம்பரமின்றி எளிய முறையில் நடந்தேறியது. தமது அந்திமக் கடன்கள் ஆர்ப்பாட்டங்கள் ஏதுமின்றி நடத்தப்பட வேண்டுமென்று அவர் உயிரோடிருக்கும்போதே உத்தர விட்டிருந்தார். முல்லைவனம் பண்ணைக்குக் காலைக் கதிரவன் தன் கிரணங்களால் பொன் முலாம் பூசிக்கொண்டிருந்தான். முதல் நாள் வேலப்பன் தோண்டி இருந்த இரண்டு சவக் குழிகளுள் ஒன்றில் தர்மலிங்கத்தின் சடலம் முறைப்படி அடக்கம் செய்யப்பட்டது. இன்னொரு குழியைத் தார்ப் பாய் போட்டுப் பிறர் பார்வையைக் கவராத வகையில் கச்சிதமாக மூடியிருந்தார்கள். சவ




உங்களைச் சுற்றிலும்
சந்தனத்தின்
நறுமணம் கமழட்டும்

மலாய் சந்தன சோப்பும்
டால்கம் பவுடரும்
நாள் எல்லாம்
உங்களை எழிலுடனும்
நறுமணத்துடனும்
திகழச் செய்ய
மிகப் பொருத்தமான
ஒரு ஜோடி

இந்த சந்தன சோப்பு - குளிர்ச்சியானது, மிருதுவானது, சுகமானது. உங்களது சருமத்துக்கு எழிலூட்டுவது. இந்த சந்தனப் பவுடர் - மிருதுவானது. புத்துணர்ச்சியூட்டுவது. இந்த சோப்பையும் பவுடரையும் உபயோகித்தால் வியர்வை கொட்டும் ஒரு வெப்பமான காளிலுங்கூட நீங்கள் சந்தனத்தின் தன்னிகரில்லாத நறுமணம்கமழ எழிலுடனும் தூய்மை உணர்ச்சியுடனும் இருப்பீர்கள்.

கல்கத்தா கெமிகல் கம்ப்பனி லிமிடெடின் தயாரிப்புகள்

HLT 8471A

அடக்கத்தில் மஞ்சுளாவோடு சேகரும், கோபாலும் கூடக் கலந்து கொண்டார்கள். ஊரின் முக்கிய புள்ளிகள், அதிகாரிகள் எல்லாம் வந்திருந்தார்கள். தர்மலிங்கத்தின் செல்வாக்கு கொடி கட்டிப் பறந்த இடமல்லவா?

ஈமக் கடன்கள் முடிந்த பின் பிற்பகலில் குடும்பத்தின் முக்கிய அங்கத்தினர்கள் ஹாலில் கூடினார்கள். அவர்களில் டாக்டர் ரகுநாத்தும் இருந்தார். சேகரும் கோபாலும்கூட இருந்தார்கள். எல்லாரையும் அப்படி அங்கு கூடும்படி செய்தவர் வக்கீல் நீலமேகம். பண்ணையின் பிரதான வக்கீல் அவர்தான். தர்மலிங்கத்தின் உயிலைப் படித்துக் காட்டுவதற்காகவே எல்லோரையும் அங்கு கூடும்படி அழைத்திருந்தார் வக்கீல் நீலமேகம். வக்கீல் தாம் கொண்டு வந்திருந்த கைப்பெட்டியிலிருந்து ஒரு நீண்ட உறையை எடுத்தபோது அத்தனை இதயங்களின் துடிப்பும் அதிகரித்தது. வக்கீல் உறையினுள் இருந்து உயிலை வெளியில் எடுத்தார். தொண்டையைக் கனைத்துக் கொண்டே மூக்குக் கண்ணாடியைத் தமது மெல்லிய மஸ்லின் கர்சீப்பினால் துடைத்துக் கொண்டிருக்கும்போது, டாக்டர் ரகுநாத், ''மன்னிக்க வேண்டும். எனக்கு மாடியிலுள்ள நோயாளியிடம் கொஞ்சம் அலுவல் இருக்கிறது'' என்று கூறி மாடிப் படிகளில் ஏறிச் சென்றார்.

மூக்குக் கண்ணாடியைத் துடைத்துச் சரியாக அணிந்து கொண்ட வக்கீல் தம் கையில் உயிலாகப்பட்ட அந்த முரட்டு வெள்ளைக் காகிதத்தை எடுத்துக் கொண்டு அங்கு உட்கார்ந்திருந்த எல்லாரையும் ஒரு நிமிஷம் மௌனமாகப் பார்த்தார்.

''நான் இந்தப் பங்களாவுக்குப் பல மாதங்களுக்கு முன்பு வந்திருந்த அந்தச் சூழ்நிலையை நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.'' தமக்கே உரிய கணீரென்ற குரலில் பேசலானார் வக்கீல் நீலமேகம்.

''ஜமீந்தாரின் அன்புக்கும் ஆணைக்கும் கட்டுப்பட்டவன் நான். தம்முடைய உயிலில் கூறியுள்ளபடி காரியங்களை நிறைவேற்றுவதற்கான அதிகாரியாக என்னைவிட வயதிலும் அனுபவத்திலும் தேர்ந்த வேறு ஓர் 'அட்டர்னி'யை அவர்கள் நியமித்திருக்கலாம். ஆனால் தம் உயிலைச் செயல்படுத்தும் தகுதியை எனக்களித்துள்ளார். என்னிடம் அவருக்குள்ள அன்பை, நம்பிக்கையையே இது காட்டுகிறது. அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரனாகும்படி நான் என் கடமையை ஒழுங்காகச் செய்வேன். தர்மலிங்கம் அவர்களுடைய இந்த எஸ்டேட் விவகாரங்களை உயிலில் கண்டபடி நிறைவேற்றும் மிகப் பெரிய பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறோம் என்ற பயத்துடனேயே நான் செயல்படுவேன் என்று உறுதியளிக்கிறேன்.''

நீலமேகம் உயிலின் மடிப்புக்களை விரித்துப் பிரித்துப் படிக்க முற்பட்டார். ஆனால் படிக்கவில்லை. சட்டென்று தம் பார்வையை அதனின்று விடுவித்து மறுபடியும் கூட்டத்தினரைப் பார்த்தார். ''இந்த உயிலைத் தர்மலிங்கம் அவர்களின் மூத்த புதல்வர் கந்தசாமியின் முன்னிலையில்தான் படிக்க வேண்டும். அதுதான் முறை. ஆனால் அவரால் இங்கு வரமுடியாது. அவர் இருக்கும் இடத்துக்கும் நாம் சென்று இதைப் படிக்க முடியாது. ஆனால் அது தேவையுமில்லை. தர்மலிங்கம் அவர்கள் இந்த உயிலை வெகு நாட்களுக்கு முன்னமேயே தயாரித்து விட்டார். இந்த உயிலில் சொல்லப்பட்டுள்ள விஷயங்கள் அத்தனையும் கந்தசாமி அவர்களுக்குத் தெரியும். தெரியும்படிதான் இது தர்மலிங்கம் அவர்களால் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இதைத் தருமலிங்கத்தின் அடுத்த வாரிசான கந்தசாமியின் முன்னிலையில் படிக்கப்படாததைக் குறையாகக் கருத வேண்டியதில்லை'' என்று கூறிச் சற்றே சரிந்திருந்த மூக்குக் கண்ணாடியை நிமிர்த்தி நேர்செய்து கொண்டார் வக்கீல் நீலமேகம்.

''இந்த உயிலின் வாசகங்களை வரிக்கு வரி, வார்த்தைக்கு வார்த்தை அப்படியே படிப்பதைவிட இதில் கூறப்பட்டுள்ள விஷயத்தை மட்டும் நான் விளக்கலாம் என்று எண்ணுகிறேன்.

''இந்தப் பண்ணையில் நீண்ட காலமாக விசுவாசத்தோடு உழைத்து வரும் சமையல்காரி காவேரி அம்மாளுக்கும் தோட்டக்காரன் வேலப்பனுக்கும் அவர்களுடைய சேவையைப் பாராட்டி ஒவ்வொருவருக்கும் இருபதாயிரம் ரூபாய் தரும்படி உத்தரவிட்டிருக்கிறார்.

''தம்முடைய மருமகளும், கந்தசாமி அவர்களின் மனைவியுமான கோகிலா அவர்களுக்குத் தருமலிங்கம் தமது உயிலில் எதுவும் குறிப்பிடவில்லை. காரணம் அவரைப் பாதுகாக்கும் கடமையும் பொறுப்பும் தமது மகன் கந்தசாமியிடம் இருப்பதினால். பிற்காலத்தில் கந்தசாமி அவர்கள் தமது இளைய தாரத்துக்குத் தக்கபடி வகை செய்வார், செய்ய வேண்டியது என்பது பெரியவரின் எண்ணம். ஆகவே கோகிலா அவர்களுக்கு எதுவும் ஒதுக்கவில்லை.''



# அலை அலையாய்த் தூக்கம்

கடலில் அலைகள் பொங்கி விழுவது போல் சப்தம் செய்யக் கூடிய ஒரு தலையணையை ஸ்டாக்ஹோம் கம்பெனி தயாரித்து உள்ளது. பத்து நிமிடங்களில் இது தூக்கத்தை வரவழைத்து விடுமாம்.

வீக்கெண்ட் - பாபு

---

வக்கீலின் வாசகத்தைக் கேட்டுக் கொண்டிருந்த கோகிலா அதிர்ச்சிக்கோ ஆத்திரத்துக்கோ ஆளாகவில்லை. அவளைப் பொறுத்தவரை இதை அவள் எதிர்பாராத செய்தியாகவே உணரவில்லை. உயிலைப் பற்றி அவளுக்கு முன்பே தெரிந்திருக்க வேண்டும் போலிருந்தது அவளுடைய சலனமற்ற தன்மை. வக்கில்தொடர்ந்துபேசலானார்.

''என்னுடைய இளைய மகன்—தருமலிங்கம் கூறுகிறார் — அவனை நான் என்றைக்குமே எனது மகனாக நினைக்கவில்லை. ஆகவே அவனுக்கு என் சொத்தில் எதையும் அளிக்கப் போவதில்லை. ஆனால் கொஞ்ச நாட்கள் நான் அவனுக்குத் தந்தையாக இருந்த குற்றத்துக்காக என் சொத்திலிருந்து ஒரே ஒரு ரூபாயை மட்டும் அவனிடம் கொடுக்க வேண்டியது — மஞ்சுளா இதுதான் உன் சித்தப்பாவைப் பற்றிய விஷயம். இந்த உயிலில்'' என்றார் வக்கீல். யாரும் எதுவும் பேசவில்லை. மறுபடியும் அவரே தொடர்ந்து பேசலானார்.

'என் பேத்தி மஞ்சுளா கந்தசாமிக்கு' என்று படிக்க ஆரம்பித்த நீலமேகம் மேலே தொடராமல், மஞ்சுளாவைப் பார்த்து, ''மஞ்சு, உன் தாத்தா உன்னைப் பற்றி இந்த உயிலில் எப்படிப் புகழ்ந்திருக்கிறார் தெரியுமா? உனக்குப் பத்து லட்சம் ரூபாய் சேர வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்'' என்றார்.

சேகரின் விழிகள் விசாலமாயின. கோபால் திறந்த வாயை மூடவில்லை. நிலைகுத்திய விழிகளை இமைக்கவில்லை. மஞ்சுளாவோ இந்தச் செய்தியினால் பாதிக்கப்பட்டவளாகவே தெரியவில்லை.

''இந்தப் பத்து லட்சம் என் பேத்தியிடம் நான் கொண்டுள்ள அன்பையும் பாசத்தையும் வெளிப்படுத்தியதாகாது. மஞ்சுளாவிடம் நான் கொண்டுள்ள பாசம் அளவிட முடியாதது. அதை வெறும் இந்த என் பணத்தினால் எல்லை கட்டிவிட முடியாது. அந்த என் செல்வத்துக்கு நான் இன்னும்கூடத் தாராளமாகக் கொடுத்திருக்கலாம். ஆனால் அவளது தந்தை அவளுக்கு முறைப்படியானதை உரியபடி செய்வார் என்றுதான் நான் இந்தச் சிறு தொகையை ஒதுக்கியுள்ளேன்.''

'இது சிறிய தொகையாமே!' என்று எண்ணி 'உஷ்' என்று மெள்ளச் சீட்டியடித்தான் கோபால். தன் நிலைக்கு வர அவனுக்கு இத்தனை நேரமாகியது.

சற்று நிறுத்திய நீலமேகம் மஞ்சுளாவைப் பார்த்து, ''உன்னைப் பற்றி இன்னோரிடத்திலும் வருகிறது, மஞ்சுளா. அதற்கு வருமுன் உன் அப்பாவைப்பற்றிக் குறிப்பிட்டுள்ள பகுதியைப் படிக்கிறேன் கேள். 'என்னுடைய மூத்த மகன் கந்தசாமிக்கு இவை போக மீதியுள்ள சகல சொத்துக்களும் சொந்தமாக வேண்டியது. இந்த என் பண்ணையின் சகல வருமானமும், பாங்கியிலுள்ள என் சேமிப்பு முழுவதும் பாண்டு பத்திரம், நில புலன், வீடு தோட்டம் உள்படச் சகலமும் கந்தசாமியைச் சேர வேண்டியது.''

நீலமேகம் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். பிறகு உயிலைத் தொடர்ந்து படிக்கலானார்.

''ஒருவேளை துர்ப்பாக்கியவசமாக என் மகன் கந்தசாமிக்கு எனக்கு முன்னால் மரணம் சம்பவிக்குமானால் என் மருமகள் கோகிலாவுக்கு ஐம்பதினாயிரம் ரூபாய் கொடுத்து விட வேண்டியது. பிறகு என் பேத்தி அவள் தகப்பனாருக்கு உரிமையாக வேண்டிய சகல ஜங்கம ஸ்தாவர சொத்துக்கள் அனைத்துக்கும் உரிமையானவளாகக் கருதப்படவேண்டும்.''

சேகர் விழிகளை இமைக்க மறந்து போய்ச் சிலையாக உட்கார்ந்திருந்தான். கோபாலின் புருவங்களோ உயர்ந்து நின்றன. திறந்த வாய் மூட மறந்தது. மஞ்சுளாவை வக்கீல் வாசித்த உயிலின் செய்திகள் எதுவுமே பாதிக்கவில்லை.

நீலமேகம் உயிலை மடித்துக் கொண்டே ''இவைதான் தருமலிங்கம் அவர்களின் உயிலின் முக்கிய ஷரத்துக்கள்'' என்று கூறியபடி கோகிலாவைப் பார்த்து ''இதன் ஒரு நகலை உங்களிடம் தருகிறேன். ஒரிஜினல் காப்பியை அமல் நடத்துவதற்கு ஏதுவாக ரிஜிஸ்டிரார் ஆபீஸில் பைல் செய்து விடுகிறேன். பண்ணையின் வக்கீல் என்ற உரிமையிலும் இந்த உயிலைத் தயாரித்தவன் என்ற முறையிலும் உங்கள் தேவைக்காக ஒரு விஷயம் சொல்லுகிறேன். இந்த உயிலில் குறிப்பிட்டுள்ளபடி மஞ்சுளா இரண்டு கோடிக்கு

(ஸ்தாபிதம்: 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
'பாலுஸேரி பில்டிங்ஸ்', 3, சிங்கராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி: 'EVERMANS', போன்: 85834 • தபால்பெட்டி: 414

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி மேற்காணும் சீட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

### நீண்ட காலச் சீட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/. |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சீட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000 | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500 | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250 | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி - பம்பாய் - பெங்களூர் - கல்கத்தா




எமது வெள்ளி விழா ஆண்டு

எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

நீலா புரொடக்ஷன்ஸ்

# யானை வளர்த்த வானம்பாடி மகன்

ஈஸ்ட்மென் கலர்

டைரக்ஷன்
**சுப்ரமணியம்**

பாடல்கள்
கண்ணதாசன்

சங்கீதம்
மகாதேவன்

ஸ்டுடியோ
மெரிலாண்ட்







ஜூன் **18** முதல்

**சென்னை: பாரகன், பிரபாத், சரஸ்வதி, லிபர்ட்டி**
மற்றும் தென்னாடெங்கும்

மேல் உரிமையுள்ளவளாகிருள்'' என்று கூறினர்.

சேகர் வக்கீலின் பக்கம் குனிந்து மெதுவாக, ''மன்னிக்க வேண்டும்... உங்கள் வார்த்தையில் தடுமாற்றம் ஏற்பட்டிருக்குமோ என்று எண்ணுகிறேன். இரண்டு கோடி என்ரு சொன்னீர்கள்?''

''ஆமாம். தடுமாற்றம் ஏதுமில்லே. இரண்டு கோடி — இருநூறு லட்ச ரூபாய்கள். பண்ணை நிலபுலன், ரொக்கம் பத்திரங்கள் அத்தனையும் சேர்ந்து'' என்ருர் நீலமேகம் தம் வார்த்தைக்கு ஒரு விசேஷ அழுத்தம் கொடுத்து.

மயக்கமடைந்தவனைப் போல் கண்களை மூடிக் கொண்டு அப்படியே நாற்காலியில் சாய்ந்து விட்டான் சேகர். பிறகு மஞ்சுளாவின் பக்கம் பார்த்து, ''ஏன் மஞ்சுளா, நீ இத்தனை பெரிய செல்வச் சீமாட்டி என்பதை என்னிடம் சொல்லவே யில்லையே ஏன்?'' என்ருன்.

மஞ்சுளா தரையைப் பார்த்துக் கொண்டே ''உங்களிடம் சொல்வதற்கான அத்தனை முக்கியமான விஷயமாக நான் இதைக் கருதவில்லை. பணத்தை நான் என்றுமே ஒரு பெரிய பெருமைக்குரிய விஷயமாகவும் நினைத்ததில்லை. நீங்கள் அப்படி நினைக்கிறீர்களா சேகர்? தவிர உயிலின் கடைசி ஷரத்து என் விஷயத்தில் பொருந்தாது. என் அப்பா இருக்கிருர். தாத்தா முதலில் இறந்து விட்டதினல் சொத்துக்குரியவர் என் அப்பாதானே? எனக்குக் கிடைக்கப் போவதெல்லாம் தாத்தாவின் அன்பளிப்பான — அது எத்தனை?... ம்....பத்து லட்சம்தானே?'' என்ருள் மஞ்சுளா சிரித்துக் கொண்டே.

''பத்து லட்சம்தானேவா? இன்றிலிருந்து என் திறமைகளை யெல்லாம் பயன்படுத்தி இன்னும் நான் முப்பது ஆண்டுகள் மாடாக உழைத்தாலும் இந்தப் பத்து லட்சத்தைப் பார்க்க முடியாதே! தவிர உன் அப்பா தன் உடைமைகளில் ஒரு பெரும் பகுதியையாவது உனக்கு உரிமையாக்காமல் இருக்க மாட்டார், இல்லையா?''

''உண்மைதான். ஆனல் நான் அதைப் பற்றியோ — ஏன் எந்தப் பணத்தைப் பற்றியுமோ நினைக்கவில்லை.''

''அதிசயமான பெண் மஞ்சுளா! நீ. இந்த மாதிரி ஒரு சொத்து உனக்கு வருவதாக எனக்கு முதலிலேயே தெரிந்திருக்குமானல்...

''இப்போது என்னிடம் நீங்கள் காட்டும் அன்பும் ஆதரவும் அப்போது காட்ட மாட்டீர்கள் சேகர். உங்களை நான் அடைந்திருக்கவே முடியாது. போகட்டும். எப்படியானல் என்ன? என்னை உங்களுடையவளாக்கிக் கொள்ளப் போகிறீர்கள். என் உடைமைகள் உங்களுடையவைதானே?''

சேகரும் கோபாலும் மஞ்சுளாவைத் தங்கள் வியப்பு வழியும் கண்களால் விழுங்கிக் கொண்டிருந்தார்கள், பேச்சற்று. அந்தச் சூழலில் மௌனமாக உட்கார்ந்திருக்கப் பிடிக்காததினலோ என்னமோ கோகிலா எழுந்திருந்தாள். அதே சமயம் சொல்லிவைத்தாற்போல டெலிபோன் மணி ஒலித்தது. கோகிலா அதற்காகவே எழுந்தவளைப் போல ரிஸீவரைக் கையில் எடுத்துக் கொண்டாள். பிறகு வக்கீல் நீலமேகத்தைப் பார்த்து, ''வக்கீல் சார், டெலிபோன் உங்களுக்குத்தான்'' என்று அதை நீட்டினுள்.

பரபரப்புடன் ரிஸீவரை வாங்கிக் கொண்டு, ''ஹலோ! நீலமேகம் பேசுகிறேன்'' என்றவர் மௌனமாகச் சில நிமிஷங்கள் டெலிபோன் அளித்த செய்தியை ஏற்றுக் கொண்டார். இளவயதுக்காரரான நீலமேகம், எதற்குமே கலங்காத திடச்சித்தம் கொண்ட நீலமேகம் கலங்கிப் போனுர் என்பதை அவரது பரபரத்த முகம் காட்டிற்று.

''என்ன... என்ன...? நிஜமாகவா?.. அப்படியா... ம்... பிறகு...?...ஓ... ஆமாம்'' என்று கரகரத்தவரின் நெற்றியிலே வியர்வைத் துளிகள் பூத்தன. நடுங்கும் வலக்கரம் கைக்குட்டையைத் தேடித் துழாவியது பையிலே. பிறகு கைக்குட்டையால் முகத்து வியர்வையைத் துடைத்துக் கொண்டே டெலிபோனை வைத்து விட்டுத் திரும்பிய நீலமேகத்தின் நிலை மிகவும் பரிதாபமாக இருந்தது.

''வக்கீல் சார்... என்ன...விஷயம்? காளியப்பனைப் பற்றித்தானே? என்னவாம்?'' என்ருள் மஞ்சுளா பரபரப்புடன்.

''இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் நம் முன்னல் இன்னும் பல தடயங்களை வீசியிருக்கிருர் மஞ்சுளா!'' என்று கூறியபடி நாற்காலியில் பொத்தென்று உட்கார்ந்தார். ''அவர்கள் இலாகா துப்பறியும் துரைசாமியைக் காளியப்பனின் இல்லத்தைச் சோதனை போட அனுப்பி யிருந்தாராம். துரைசாமி அங்கு — காளியப்பன் வீட்டில் பதுக்கி வைத்திருந்த பணத்தைக் கண்டுபிடித்திருக்கிருராம். மறைந்து போன உங்கள் காரியதரிசி ராமு, மர்மமாகக் காணமல் போன உன் தோழி நர்ஸ் நிர்மலா இவர்கள் இருவரிடமும் எத்தனை பணம் இருந்திருக்க முடியுமோ அதையும் விட அதிகமான தொகையாம் துரைசாமி காளியின் வீட்டில் கைப்பற்றியுள்ளது'' என்ருர் வக்கீல் நீலமேகம். (தொடரும்)

# இந்திய உதவி காப்டன் வெங்கட்ராகவன் பிலிப்ஸ் ஸைக்கிள் உதவியினால் உடல் வளத்தை தெம்புடன் வைத்திருக்கிறார்



கிரிக்கெட் பந்தயங்களில் திறம்பட பந்து வீசுவதற்கும், பந்து அடிப்பதற்கும், தடுத்து நிறுத்துவதற்கும் எப்பொழுதும் துடிப்புடன் இருப்பதின் அவசியம் அவருக்குத் தெரியும். தினசரி தன் பிலிப்ஸ் சைக்கிளில் சவாரி செய்வதின் மூலம் அவர் எப்பொழுதும் தெம்புடன் செயலாற்றுகிறார். சந்தேகமில்லை. உலகப் புகழ் வாய்ந்த பிலிப்ஸ் சைக்கிள் ஊக்கமிகு வாலிபர்களுக்கு உகந்தது. உறுதியானது; அனாயாசமாய் சவாரி செய்ய வல்லது. கரடு முரடான சவாரிக்கும் ஈடு கொடுக்க வல்லது. நீங்கள் ஒரு ஸ்கூட்டரோ அல்லது ஒரு மோட்டார் சைக்கிளோ வாங்கும் வரை, எங்கு வேண்டுமானாலும் செல்ல ஒரு பிலிப்ஸ் சைக்கிள் வைத்திருங்கள்.

*ஊக்கமிகு வாலிபர்கள் உகந்து வாங்குவது பிலிப்ஸ் சைக்கிள்.*







# பிலிப்ஸ்

இந்தியாவில் தயாரிப்போர்:
**டி.ஐ. சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா**
அம்பத்தூர், சென்னை-53

உரிமையாளர்கள்:
**டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட், சென்னை**

பதிவுபெற்று உபயோகிப்போர்.

J.A. பிலிப்ஸ் கம்பெனி லிமிடெட், யுகேயின் பதிவுபெற்ற டிரேட் மார்க்குகள்.

TIC/PH/6373

# வேலை யாருக்கு?

'அய்க்கண்'



வழக்கம் போல் ஐந்து முப்பதுக்கு அலாரம் அடித்தது. வழக்கம் போல், படுக்கையிலிருந்து எழுந்தார் வடிவேலு.

நேற்று வரை அவர் தென்னாட்டின் மிகப் பெரிய, சண்ட் கோண்ட் கெமிகல்ஸின் ஜெனரல் மானேஜர்: இன்று அந்த ஜி. எம். வடிவேலு ரிடையராகி விட்டார். இப்பொழுது வெறும் வடிவேலு தான். மீண்டும் படுத்துக் கொண்டார். ஆனால் நீண்ட நேரம் அப்படி சும்மா படுத்திருக்க முடியவில்லை.

படுக்கையிலிருந்து எழுந்து, 'பால்கனி'க்கு வந்து கீழே தெருவைப் பார்த்தார். அப்பொழுது தான் விழித்துக் கொண்ட தெருவும், சுறுசுறுப்பாக நடமாட ஆரம்பித்திருந்தது. பால்கரர்கள், காய்கறிக்காரர்கள், கடைகளுக்குச் செல்பவர்கள்... ஒவ்வொருவருக்கும் ஒரு வேலை: ஒவ்வொருவருக்கும் சுறுசுறுப்பான இயக்கம் — ஆனால் வடிவேலுக்கு மட்டும் வேலையில்லை.

காலடிச் சத்தம் கேட்டுப் பின்னும் திரும்பிப் பார்த்தார். காந்திமதி நின்று கொண்டிருந்தாள். ஏதோ கேட்க வந்திருக்கிறாள்.

'' என்ன, காந்தி ?''

''ஒன்னுமில்லீங்க... நீங்க குளிக்க வரலியா?... கீழே பிள்ளைகளெல்லாம் காத்துக்கிட்டிருக்காங்க....'' என்று மெதுவாகச் சொன்னாள் காந்திமதி.

தினசரி முதலில் அவர்தான் குளிப்பார். அவர் குளித்த பிறகுதான் நாராயணனும், சிவப்பிரகாசமும், மாதவியும் குளியலறைப் பக்கம் போவார்கள்.

இனி, 'வழக்கத்துக்கு' என்ன தேவை ?

''காந்தி! பிள்ளைகள் முதலில் குளிக்கட்டும். நான் கடைசியில் குளிக்கிறேன்.''

காந்திமதி கீழே இறங்கிச் சென்றாள்.

எவ்வளவு நேரம்தான் தெருவையே பார்த்துக் கொண்டிருப்பது? மெதுவாகக் கீழே இறங்கி, ஹாலில் வந்து உட்கார்ந்தார், வடிவேலு. அவர் வந்ததும், அங்கே நடமாடிக் கொண்டிருந்த ஒவ்வொருவரும் மெதுவாக வெவ்வேறு இடங்களுக்கு நழுவினார்கள். அங்கே விளையாடிக் கொண்டிருந்த பேரக் குழந்தைகள் பாபுவும் குமாரும்கூட, பின் கட்டுப் பக்கம் நகர்ந்தார்கள்.

அவரே கூப்பிட்டால் அல்லது அவரிடம் ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால் ஒழிய, யாரும் அவரிடம் வந்து பேசுவதில்லை.

பிள்ளைகளெல்லாம் அவரவர் அலுவலகம், கல்லூரிகளுக்குப் புறப்பட்டதும், வடிவேலு ஹாலிலிருந்து வாசற் பக்கம் வந்து தெருவைப் பார்த்துக் கொண்டு நின்றார்.

எதையோ பறிகொடுத்த உணர்வு நெஞ்சில் தொத்திக் கொள்ள, உள்ளே வந்து குளித்து விட்டுச் சாப்பிட உட்கார்ந்தார். அவருக்குக் காந்திமதிதான் பரிமாறுவாள். எப்போதும் அவசரமாகச் சாப்பிடும் வடிவேலு, இன்று மிக மெதுவாக, வாயையும் கையையும் அசைத்துக் கொண்டிருந்தார். சாப்பாட்டுச் சுவையிலே எந்தவித ஈடுபாடும் இல்லாமல், இயந்திரம் போல் விழுங்கிக் கொண்டிருந்தார்.

'' என்னங்க, நேத்தி, உங்க ஷட்டகர் பையன் கேசவன் வந்திருந்தான். உங்ககிட்டே போன வாரம் சொல்லியிருந்தானாமே, ஏதாவது வேலை பார்த்துத் தரச் சொல்லி. அதை ஞாபகப்படுத்திட்டுப் போக வந்தான். அவனுக்கு ஏதாவது ஒரு ஆபீஸில் வேலை வாங்கிக் கொடுங்களேன்! நீங்க சொன்னால், யாரும் அவனை வேலைக்குச் சேர்த்துக்கிடுவாங்க....'' என்றாள் காந்திமதி.

கேசவன் அவளுடைய தங்கையின் மகன் தான். ஆனால் 'என் தங்கை மகன்' என்று அவள் சொல்வதில்லை. 'உங்க ஷட்டகர் மகன்' என்றுதான் சொல்லுவாள். உலகத்தையே அவர் மூலமாகப் பார்ப்பதுதான் அவளுக்கு வழக்கம்.

வடிவேலு ஒன்றும் பதில் பேசவில்லை. அவர் எதுவும் பதில் சொல்வார் என்று காந்திமதியும் எதிர்பார்க்கவில்லை.

வீட்டில் மாமியாரும் மருமகளும் ரேடியோவும் புத்தகமுமாகப் பொழுதைப் போக்கிவிடுவார்கள். அவர்கள் ஹாலில் வந்து இருந்து கொள்ளட்டும் என்று நினைத்து, முன்னால் உள்ள 'ஸ்டடி ஹாலு'க்குள் நுழைந்தார். அங்கே நாராயணனுடைய மேஜையில் அன்றையச் செய்தித் தாள் இருந்தது. அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தார்.

வடிவேலுவுக்கு ஒன்றும் புரியவில்லை. நியூஸ் பேப்பர் ஹாபிட் அவருக்குக் கிடையாது. அரசியலில் 'ஏ.பி.ஸி.டி..' தெரியாதவர் அவர்.

செய்தித் தாளைக் கீழே போட்டுவிட்டு எழுந்து எதிரே இருந்த புத்தக அல்மாரியைப்

பார்த்தார். ஏராளமான தமிழ், ஆங்கிலப் புத்தகங்கள்.

அலமாரியில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங்களின் முதுகுகளையும் அவற்றில் எழுதியிருந்த பெயர்களையும் பார்த்துக் கொண்டே வந்தார்.

'திருக்குறள்' — அதை எடுத்து ஏதோ ஒரு பக்கத்தைப் புரட்டினார்.

இதெல்லாம் தமிழ்தானா ? இந்தத் 'தமிழ்' எப்படி அவருக்கு இவ்வளவு நாட்கள் தெரியாமலே போய் விட்டது?

ஆங்கில வரிசைப் பக்கம் கண்ணை ஓட்டினார். ஷேக்ஸ்பியர் — 'அஸ் யு லைக் இட்' நாடகம் எடுத்துப் பார்த்தார்.

ஒன்றும் புரியவில்லை! ஆனால் அதே சமயம் அவருக்கு ஓர் உண்மை புரிந்தது. இலக்கியங்களைப் பொறுத்த வரையில் அவருக்குத் தமிழும் ஆங்கிலமும் ஒன்றுதான் ! அவர் உலகம் அதுவல்ல — வேறு !

சட்டென்று, புயல் வேகத்தில் உள்ளத்துக்குள் சூன்யம் உருவாகி ஆழமாக மூடிநின்றது.

ஓ ! உலகத்தில் உள்ள எத்தனை விஷயங்கள் அவருக்குப் புரியாமலே போய்விட்டிருக்கின்றன? சங்கீதம், இலக்கியம், ஓவியம், விளையாட்டு.... இன்னும் எத்தனையோ ?

அந்த ஆழமான சூனியக்கத்தின் நடுத்தின்னும் ஒரு மகிழ்ச்சி மின்னல் : பெருமிதப் பூரிப்பு.

பகல் முழுவதும், பங்களாவின் மேலும் கீழும் — அங்கும் இங்கும் — நடந்து, இருந்து, சுற்றிக் கொண்டிருந்தார். கடிகாரத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.

காலம் நகரவில்லை. கார்த்திகை மாதத்து மூடுபனி போல், கனமாக அவரைப் போர்த்துக் கொண்டு நின்றது.

அவருடைய — அவருக்கென்று இருந்த உலகத்தில் — ஆபீஸ் கடிகாரம் 'டாண் டாண்' என்று பத்துத் தடவை அடித்ததும், அவருடைய பூட்ஸின் 'டக் டக்'கும் இணைந்து ஒலிக்க, ஆபீசுக்குள் நுழைந்து விட்டால், நிர்வாக, பொருளாதார, தயாரிப்பு சம்பந்தப்பட்ட 'பைல்'களில் மூழ்கி விடுவார். அந்தப் 'பைல்களே' அவருடைய உற்றாரும் உறவினரும், நண்பரும், பகைவரும். அந்த உலகத்தை விட்டுப் பிரிந்த அவர், தண்ணீரிலிருந்து எடுத்துத் தரையில் போடப்பட்ட மீனைத் துடித்தார்.

பலப் பல யுகங்களாக நீடித்த அன்றையப் பொழுதின் முடிவில் அவருக்குப் புரிந்து விட்டது—

இந்த உலகத்தில் அவர் வாழ முடியாது. அந்த மீன் மறுபடியும் தண்ணீருக்குள்தான் செல்ல வேண்டும்! அவர் மறுபடியும் ஏதாவது வேலை பார்க்க வேண்டும். அவருக்கு ஓய்வு கிடையாது: ஓய்வு எடுத்துக் கொள்ள அவரால் முடியாது. பாவம், அதற்குரிய 'தகுதி' அவருக்குக் கிடையாது ! அவருக்கு உழைப்பு — உழைப்பு — உழைப்பு வேண்டும். அது எந்த வேலையாக இருந்தாலும் சரி. 'டிக்னிடி ஆப் லேபர்' அவருக்குத் தெரியும்.

அன்றையப் பத்திரிகையை எடுத்து 'வான்டட்' பக்கத்தைப் பார்த்தார்.

''நகரிலுள்ள அருணா மிட் பண்டஸில் வரும் விஷயங்களை மேற்பார்வை செய்ய ஒரு பட்டதாரி தேவை. படிப்புக்கும் அநுபவத்துக்கும் திறமைக்கும் சம்பளம். ரிட்டயரான முதியவர்களும் விண்ணப்பிக்கலாம்.''

அருணா மிட் பண்ட்ஸ் முதலாளி நாச்சியப்பனை அவருக்குத் தெரியும். வடிவேலுவின் திறமையைப் பற்றி நாச்சியப்பனுக்கும் தெரியும். நாளைக்கு அவன் முன்னால் போய் விண்ணப்பத்தை நீட்டினால், உடனே கையைப் பிடித்து ஆபீஸில் உட்கார்த்தி விடுவான் !

வடிவேலு, நிம்மதிப் பெருமூச்சுவிட்டார்.

கீழே வீடு கலகலவென்று இருந்தது. கல்லூரியில் இருந்து எல்லாருமே வந்துவிட்டார்கள். பேச்சு, சிரிப்பு, குழந்தைகளின் கும்மாளம், ரேடியோவின் 'சப்தம்'....

திடீரென்று குமாரின் அழுகை.

மாடியிலிருந்து கீழே பார்த்தார் வடிவேலு.

குமார் விளையாடிக் கொண்டிருந்த நடை வண்டியைப் பறித்துக் கொண்டு, பாபு ஓட்டி விளையாடிக் கொண்டிருந்தான். தனக்கு வண்டி வேண்டும் என்று குமார் கேட்க, பாபு மறுக்க, இருவரும் ஒருவரையொருவர் நெருங்கிக் கைகலக்க, கடைசியில் குமார், தன் 'மூல பலத்தை'ப் பயன்படுத்தினான்: 'ஓ' என்று அழுது அரற்றினான்.

அவர்களைச் சமாதானப்படுத்தப் பாட்டி ஓடி வந்தாள்.

''டேய், பாபு ! நடை வண்டியைத் தம்பிக்குக் குடடா !''

''ஊஹூம்..... எனக்குத்தான்.''

சாந்திமதி, கிட்டத்தில் வந்து பாபுவை அணைத்துக் கொண்டாள்.

''பாபுக் கண்ணு ! உனக்கு எதுக்கு நடை வண்டி ? உனக்குத்தான் நல்லா நடக்கத் தெரியுமே ! தம்பிக்குத்தான் நடக்கத் தெரியாது. அவனுக்குத்தான் நடை வண்டி வேணும், பாபு! நடை வண்டி ஓட்டுற பருவம் உனக்குப் போயிடுச்சு. நடக்கத் தடுமாறுகிறவனுக்கு வண்டியைக் கொடுத்திடறதுதான் பெரியவனுக்கு அழகு....''

உடனே அந்தப் 'பெரியவன்' குமாருக்கு நடைவண்டியைக் கொடுத்து விட்டான்.

அதே சமயம், உள்ளே நுழைந்தான் கேசவன்.

சட்டென்று ஓர் எண்ணம், தீப்பொறியாய் வடிவேலுவைச் சுட்டது.

கேசவன் பி. ஏ.க்கு ஒரு வேலை வேண்டும். வாழத் துடிக்கிற அந்த இளைஞனுக்கு ஒரு வேலை வேண்டும். அவருக்கு....? வேலை பார்க்கிற பருவம் அவருக்குப் போய் விட்டது. இனி அவருக்கு ஓய்வு பெறும் பருவம்... ஓய்வா? அவரால் ஓய்வு பெற முடியுமா ? முடியும்; முடியத்தான் வேண்டும். எப்படி, குழந்தை, ரேடியோ, செய்தித் தாள், இலக்கியம், கலைகளோடு இணைந்து அவர் ஓய்வு பெறத்தான் வேண்டும்.....

'அருணா மிட் பண்ட்ஸ் வேலையைக் கேசவனுக்குத்தான் கொடுக்க வேண்டும். அதுதான் பெரியவருக்கு அழகு.'

''வா, கேசவா! உன்னைத்தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். உட்கார். நாளைக்கு உனக்கு ஒரு வேலை வாங்கித் தருகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே கீழே இறங்கி வந்தார் வடிவேலு.




# கருணை உள்ளம்

ஹாப்ஸ்பர்க் வமிசத்தின் முதல்வன் என்று சொல்லப்படுகிற முதலாவது ருடால்ப் (1218-1296) பல போராட்டங்களுக்குப் பிறகு ஆஸ்திரியா நாட்டின் மீது பூரண ஆதிக்கம் செலுத்தி வந்தான். இவன் வீரத்திலும் போர்த் திறத்திலும் மகா அலெக்ஸாந்தர், சீஸர், நெப்போலியன் ஆகியோருக்குச் சமதையானவன்.

ஒருசமயம் ருடால்ப் வேட்டையாட, தன் பரிவாரங்களோடு குதிரை மீது சென்று கொண்டிருந்தான். வழியில் ஓரிடம் ஒரே சகதியா யிருந்தது. அந்தச் சகதியில் ஒரு பாதிரி, யாரோ இறக்குந் தருவாயில் இருந்த ஒருவனுக்குப் பிராயச்சித்தம் செய்து வைக்கத் தட்டுத்தடுமாறி வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் ருடால்ப், 'ஏகநாதரின் உபதேசங்களைப் பின்பற்றி நடக்கிற ஒருவர் காலால் நடந்து செல்வதா' என்று சொல்லிக் கொண்டு குதிரையிலின்று இறங்கிப் பாதிரியிடம் குதிரையை ஒப்புவித்து அதன் மீது ஏறிச் செல்லுமாறு கூறினான். ருடால்ப் அரச காரியங்களை மிகவும் கண்டிப்புடன் நடத்தி வந்தானாயினும் அதிகாரத்தை விட அன்பினாலேயே அதிகம் பேரை ஆட்கொண்டு வந்தான்.

ஆஸ்திரியா நாட்டுக்கும் பொஹிமியா நாட்டுக்கும் கடும் பகைமை ஏற்பட்டு, 1278-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் இருபத்தாறாம் தேதி மார்ச்பீல்ட் என்ற இடத்தில் கடும் போர் நடைபெற்றது. ருடால்ப் தானே படைத் தலைமை தாங்கிப் போரை நடத்தி வந்தான். அப்பொழுது அவனுடைய போர்வீரர்கள், குடிப்பதற்குத் தண்ணீர் அகப்படாமல் தாகத்தினால் தவித்தனர். இந்தச் சமயத்தில் போர்வீரர்களில் ஒருவன் எங்கிருந்தோ ஒரு குவளை தண்ணீரைக் கொண்டு வந்து இவனிடம் கொடுத்துத் தாகசாந்தி செய்து கொள்ளுமாறு வேட்டுக் கொண்டான். "இத்தனை பேர் தாகத்தால் தவித்துக் கொண்டிருக்க நான் மட்டும் இந்தத் தண்ணீரைக் குடிப்பதா? இந்தக் குவளைத் தண்ணீரை எல்லோருக்கும் பங்கிட்டுக்கொடுக்கவும் முடியாது" என்று கூறிக் குவளைத் தண்ணீரைத் திருப்பிக் கொடுத்துவிட்டான். இவனுடைய கருணை கலந்த வீரத்தை ஆஸ்திரிய மக்கள் இன்றளவும் மெச்சிப் பேசுகிறார்கள். - "சந்திர மாணிக்கன்"

---

## வந்தாலும் வரும்!

மனமெல்லாம் சுமை
யாக்கிக் காத்திருந்தேன்

நலமெல்லாம் சுமை
யாக்கி நீயும் வந்தாய்.

வயிறெல்லாம் சுமை
யாக்கி பஸ் வந்தாலும்

வரும்; போவோம்
நடந்தே, 'ஆனந்'துக்கு!

- நீலகண்டன்



---



"பிரின்ஸிபால் சார், எங்க அப்பாவும் நீங்களும் ஒன்றாகப் பாலக்காட்டிலே படிச்சீங்களாம்."

"நான் பாலக்காட்டில் படிக்கவேயில்லையே?"

"என் அப்பாவுந்தான். அப்படியானால் வேறே யாராவது இரண்டு பேர் படிச்சிருப்பாங்க!"



▲ "உன் அப்பாவைப் போல் பொறுமை யாருக்கும் வராது. மருத்துவக் கல்லூரியில் ஒரு பையனுக்கும் புகுமுக வகுப்பில் ஒரு பையனுக்கும் ஒரே சமயத்தில் இடம் பிடிப்பதென்றால் சும்மாவா?"

"இல்லே. அதனால்தான் காசிக்குப் போயிருக்கிறார்."

## அட்மிஷன் அதிர்ச்சிகள்!

தே. வி. முரளி

பெண்கள் கல்லூரியில் ஒரு தந்தை: மேடம், என் பெண்ணுக்கு நாட்டியம் கூட நன்றாகத் தெரியும்!

பிரின்ஸிபால்: ஆண்டு விழா சமயம் 'சான்ஸ்' வேண்டுமானால் தருகிறேன். 'ஸீட்' இல்லை!

▼



"என்ன சார், சோகமாக இருக்கிறீர்கள்? என்ன விஷயம்?" ►

"ஸீட்டுக்கு நன்கொடையாக எல்லாப் பணத்தையும் கொடுத்து விட்டேன். இப்போது புத்தகம், நோட்டுப் புத்தகம் வாங்கப் பணம் இல்லை!"



## புதிய கோத்ரெஜ் ஸ்டோர்வெல்

## கொண்டுள்ள குணநலன்கள்



# அப்பாவைத் தேடி...

வ.சா.நாகராஜன்



மார்ச்சு மாதம் முழுவதும் நான் தவறாமல் அமர்க்களம். ஒரு நாள் கல்லூரி தினம், ஒரு நாள் இலக்கிய மன்றம், ஒரு நாள் ஹாஸ்டல் தினம், ஒரு நாள் கடைசி வருஷ மாணவிகளுக்கு வழியனுப்பு உபசாரம், ஒரு நாள் விளையாட்டு தினம் என்று கிட்டத்தட்ட இருபது நாட்களுக்குமேலாகப் படிப்பை மூட்டை கட்டி வைத்துவிட்ட மாணவிகள் அத்தனை பேரும், கொண்டாட்டங்கள் முடிவடைந்தவுடன் ஏதோ கனவிலிருந்து விழித்து எழுந்தது போல் முழுமூச்சுடன் மீண்டும் படிப்பில் ஆழ்ந்து விட்டார்கள். ஏப்ரல் இரண்டாம் தேதியிலிருந்து பரீட்சை ஆரம்பம்.

கொண்டாட்டங்களின் கடைசி நாளான இன்று நாடக விழா முடிந்து, இரவு ஹாஸ்டல் அறைக்குத் திரும்பியதும் அலுப்புடன் படுக்கையில் சாய்கிறேன். அரை மணி நேரம் கழித்து உள்ளே வந்த தயா, வந்ததும் வராததுமாக மேஜையடி விளக்கைப் போட்டுக் கொண்டு படிக்க ஆரம்பிக்கிறாள். எப்படி அவளால் படிப்பில் கவனம் செலுத்த முடிகிறது என்று எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நாடகக் காட்சிகளிலிருந்தும், முதல் நாள் விருந்து வைபவங்களிலிருந்தும் என் மனம் இன்னும் விடுபடவில்லை. அவற்றைப் பற்றி மறந்து மனத்தைப் படிப்பில் ஈடுபடுத்தப் பயமாக இருக்கிறது. படித்து முடித்தால் பரீட்சைகள் வரும். பரீட்சைகள் முடிந்தால் ரிசல்ட் வரும். ரிசல்ட் வந்தால் என் பெயருக்குப் பின்னால் இரண்டு எழுத்துக்கள் வரும். அதன் பின்னர்.... அதன் பின்னர்.....?

தயாவோ ரிசல்ட் வரும் நாளை மிக ஆவலுடன் எதிர்பார்க்கிறாள். எந்தக் காரணத்தைக் கொண்டும், அவள் இந்தக் கடைசி வருடப் பரீட்சையில் பாஸாகாமல் இருந்து விட முடியாது. நிச்சயம் பாஸ் பண்ணியே ஆகவேண்டும்! காரணம்...காரணம்...அவள் கல்யாணம் நடைபெறப் பரீட்சைகள் தடையாக இருக்கின்றன. பரீட்சைகள் முடிய வேண்டியதுதான். அநேகமாக ரிஸல்ட் வருவதற்குள்ளாகவே அவளுக்குக் கல்யாணம் நடந்து விடும்.

தயா மாத்திரமா...? என்னுடன் படிக்கும் இந்த முப்பத்தைந்து மாணவிகளுக்கும் வாழ்க்கையில் ஏதேதோ லட்சியங்கள், ஏதேதோ பற்றுக்கோடுகள் இருக்கின்றன. தயாவுக்குக் கல்யாணம். அடுத்த அறை பானு கல்லூரி விழாக்களில்கூடப் பங்கேற்காமல் மார்ச் மாத ஆரம்பத்திலிருந்தே படிப்பில் ஆழ்ந்து போய் விட்டாள். ஒன்றுமில்லாத மைதிலிக்குக்கூட வாழ்க்கையில் ஒரு பிடிப்பு, லட்சியம் இருக்கிறது. அவள் ஏழைதான். தயாவைப் போலவோ, பானுவைப் போலவோ திட்டங்கள் எதுவும் இல்லாதவள்தான். ஆனாலும் ஏழைக்கேற்ற எள்ளுருண்டை என்கிற மாதிரி அவள் நிலைமைக்கு ஏற்ற லட்சியம் என்று ஒன்று இருக்கத்தான் செய்கிறது. அவள் அப்பா சாதாரணமான நிலைமையில் உள்ளவர். மைதிலி நன்றாகப் படிக்கிறாள் என்ற காரணத்தினால்தான் அவளுக்குக் கல்லூரிப் படிப்பு கைகூடியிருக்கிறது. இது முடிந்த பின்னர் கல்யாணம் என்ற படியில் கால் வைக்க அவள் வீட்டில் வசதியில்லை. ஆகவே நாலைந்து வருஷங்கள் ஏதாவது வேலை பார்த்தாக வேண்டும் என்ற லட்சியம் அவளுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறது.

இப்படி மற்ற முப்பத்துமூன்று பேருக்கும் ஏதேதோ எண்ணங்கள், பிற்காலத்தைப் பற்றிய கற்பனைகள் என்ற வகையில் திறந்து கிடக்கும் பாதைகள் கண் முன் தெரிந்திருக்கின்றன. நானும் தேடித் தேடி, அலசி அலசிப் பார்க்கிறேன். அத்தனை பேரும் கல்லூரிப் படிப்புக்கு என்றைக்கு முழுக்குப் போடப் போகிறோம் என்றே இருக்கிறார்கள்.

நான்......? நான்.....?

ஏப்ரல் மாதம் இரண்டாந் தேதி பரீட்சைகள் ஆரம்பமாகும். பத்துப் பதினைந்து நாட்கள் தொடர்ந்து நடக்கும். நான் வேண்டாம் என்றால்கூட எனக்குப் பாஸாகி விடும். முதல் வகுப்பு கிடைக்க வேண்டும் என்ற இலட்சியம் எல்லாம் எனக்குக் கிடையாது. என் லட்சியம் எல்லாம் ஒரு வேளை அதிர்ஷ்டவசமாக பெயில் ஆனால், அடுத்த வருஷமும் இங்கேயே நாட்களை ஓட்டலாம் என்பதுதான்.

காலை வேளையில் கண் விழித்துப் புது உற்சாகத்துடன் காச் மூச் என்று கத்திக்கொண்டு கூட்டைவிட்டு வெளியே பறக்கும் பட்சிகளைப் போல் அத்தனை சகமாணவிகளும் பரீட்சைகள் முடிந்ததும் ஒவ்வொருவராகப் பறந்து போய் விடுவார்கள். மாலதி, ரோட்ரிக்ஸ், ரங்கநாயகி உட்பட. நான்..... நான்......?

பரீட்சைகள் முடியும். பின்னர் எங்கே போவது...? எந்த வீட்டு வாசல் கதவு எனக்காகத் திறந்து வைக்கப்பட்டிருக்கிறது....?

இந்த நான்கு வருஷங்களாக விடுமுறை நாட்கள் எல்லாம் எப்படி எப்படியோ தேய்ந்து விட்டன. பி.யு.ஸி. படித்து முடித்த அந்த முதல் வருஷ விடுமுறையின் போது ஊருக்குப் போயிருந்தேன். இந்த உலகத்தில் எனக்கு இருந்த ஒரே பிடிப்பு மந்திரமூர்த்தி. உறவில்லாத உத்தமமான பிடிப்பு. அடுத்த வருஷம் அவரும் போன பிறகு எனக்குத் திருநெல்வேலி மண் உறவும் விட்டுப் போய் விட்டது. இனி என் வரை அந்த அழகிய ரத வீதிகளும் பாறை இடுக்குகளின் வழியே தண்ணீர் ஓடி வரும் தாமிரவருணி ஆறும் ஏதோ வேற்றூர்தான். — அடிவானத்துக்கு அப்பால் தெரியும் அழகிய வானவில்லைப் போன்ற மாயம்தான்.

முதல் இரண்டு வருஷக் கல்லூரிப் படிப்புக்குப் பின்னர் லீவுக்கு ஊருக்குப் போயிருந்தபோது புதுப் பிறவியாகப் போனேன். வாழ்க்கை, புதுவிதமான சிந்தனைகளையும் தன்னம்பிக்கைகளையும் கொடுத்திருந்தது. அவ்வப்போது மற்றவர்கள் சொன்னதைக் கேட்டும் ஏதோ எனக்குக் கொஞ்சம் தெரிந்திருந்தாலும் அப்போதுதான் மந்திரமூர்த்தி முழு விவரத்தையும் சொன்னார். ஒரு வேளை தானும் கூடிய சீக்கிரம் போய்விடப் போகிறோம், பிறகு இவளுக்கு இவளைப் பற்றிய விவரம் தெரியாமலே போய்விடப் போகிறதே என்று தெரிந்து கொண்டுதான் சொன்னாரோ, என்னவோ?

மந்திரமூர்த்தி சொன்னார்: ''அவர் தங்கமான பிள்ளை. அம்மாவிடம் அவர் உயிரையே வைத்திருந்தார். அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாகக் கையடித்துச் சத்தியம் செய்து கொடுத்தார். அம்மாவும் அவரைப் பூரணமாக நம்பினாள். அவரை அம்மா தெய்வமாகவே மதித்து நடந்தாள். சேர்ந்தாற்போல் ஐந்தாறு நாட்கள் அவர் வராவிட்டால் வாடிப் போய் விடுவாள். தென்காசியில் அவருக்கு நிலபுலன்கள் இருந்தன.... படித்துவிட்டு வந்து நிலங்களைப் பார்த்துக் கொண்டு ஊரோடு இருக்க ஆரம்பித்தபோதுதான் ஏதோ சந்தர்ப்பவசத்தினால் அம்மாவின் அன்பைப் புரிந்து கொள்ள நேர்ந்தது. ஊரே பகைத்தாலும் அம்மாவைக் கைவிட மாட்டேன் என்று உறுதியாக இருந்தார் அவர். ஆனால் அவரைப் பெற்றவர்கள் அவர் போக்கைத் தெரிந்து கொண்டு ஏதோ காரணம் சொல்லி அவரை ஊரை விட்டுச் சென்னைக்கு அழைத்துக் கொண்டு போய்ப் பின்னர் ஊர்ப் பக்கம் வரவிடாமலே செய்துவிட்டார்கள். அம்மாவும் 'அவர் நாளைக்கு வருவார், அடுத்த மாதம் வருவார்' என்று எண்ணி எண்ணி ஏங்கி நாட்களை ஓட்டினாள். அப்படிக் கழித்த நாட்களில் நீ அம்மாவின் வயிற்றில் நான்கு மாதங்கள். பாட்டி எப்படி எப்படியெல்லாமோ சொல்லி அம்மாவின் மனத்தைக் கலைக்க முயற்சி செய்தாள்.... அம்மா கேட்கவில்லை. நீ பிறந்தாய். பிறந்து இரண்டு மூன்று வருஷங்களில் பாட்டியின் பிடிவாதமும், தொல்லையும் நம்பினவர் கைவிட்ட துக்கமும் சேர்ந்து தாங்க முடியாமல் மனமுடைந்து போய் அம்மா ஒரு நாள் தூக்கு மாட்டிக் கொண்டு உயிரை விட்டாள்!....''

மந்திரமூர்த்தி பிழியப் பிழிய அழுதார். '' உன் அம்மா தெய்வம் அம்மா ! யார் செய்த பாவமோ, இந்த வீட்டில் பிறந்து அப்படி முடிய வேண்டும் என்றிருந்தது!''

முகம் தெரியாத அம்மாவை நினைத்து நானும் அழுதேன். ''சொல்லுங்கள், எந்த இடத்தில் அம்மா தூக்குப் போட்டுக் கொண்டாள்....?'' என்று கேட்டேன்.

அவர் என்னை வீட்டின் பின்கட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் அங்கே இருந்த உத்திரம் ஒன்றைக் காண்பித்தார். அம்மாவுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்த அந்த மரத்தைப் பக்தியுடன் பார்த்தேன். மந்திரமூர்த்தி அப்பால் போனதும் அதையே அம்மாவாக நினைத்து அதை வணங்கிப் பூஜித்தேன்.

தென்காசிக்காரரைப் பற்றி மேலும் விசாரித்தேன். அவர்கள் ஊரை விட்டுப் போய் விட்டார்கள் என்ற விவரத்தைத் தவிர வேறு எதுவும் அவரால் சொல்ல முடிய



வில்லை. இடையில் பதினெட்டு வருஷங்கள் ஆகிவிட்டிருந்தது. எனக்கு இப்போது முழு விவரமும் தெரிந்த போது அந்தத் தென் காசிக்காரரைப் பார்க்க வேண்டும் என்று இருந்தது. பார்த்து உறவுமுறை எதையும் புதுப்பித்துக் கொள்ள முடியாதுதான். ஆனாலும் எனக்கு அம்மா என்ற உறவு இருந்தது எவ்வளவு உண்மையோ, அந்த அளவுக்கு அப்பா என்று ஒருவர் இருந்ததும் உண்மைதானே? அவரை வாய்விட்டு அப்பா என்று அழைக்க முடியாவிட்டாலும் அவர் யார், யார் மாதிரி இருப்பார், வாழ்க்கையில் என்ன செய்து கொண்டிருப்பார் என்று அறிய வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. அதனால் என்ன பயன் கிடைக்கும் என்று யோசியாமல் அவரைப் பார்க்க வேண்டும் என்று என்னுள்ளம் துடித்தது.

மந்திரமூர்த்தியைத் தென்காசிக்குப் போய் அவரைப் பற்றி விவரம் அறிந்து வரும்படி அனுப்பி வைத்தேன். ''நிலம், நீச்சு எல்லா வற்றையும் அப்போதே விற்றுவிட்டு அவர்கள் சென்னையோடு போய்விட்டார்கள்'' என்று தான் அவரால் சொல்ல முடிந்தது. என்ன வேலை, எங்கே இருக்கிறார் என்று அவரால் விசாரித்து வர முடியவில்லை.

எனக்குப் பதினெட்டு வயதாகியிருந்தது. அது வரை தென்காசியைப் பார்த்ததுகூட இல்லை. அப்பா என்று இருந்திருக்கக்கூடிய வர் அந்த ஊரில்தான் இருந்தார் என்ற விவரம் தெரிந்திருந்ததால் அந்த ஊரில் சரியானபடி விசாரித்தால் அந்த மனிதர் இப் போது எங்கே இருக்கிறார் என்று தெரிந்து விடும் என்று தோன்றியது. ஆகவே, அப்பா வைத் தேடி நானே தென்காசிக்குக் கிளம் பினேன்.

தென்காசி. சந்நிதித் தெரு. அதோ தேரடி. எதிர்வீடு என்றுதான் மந்திரமூர்த்தி சொல்லியிருந்தார். எங்கள் வீட்டைப் போல் முன் பக்கம் கம்பி போட்ட பெரிய வீடு. இப் போது அந்த வீட்டில் வேறு யாரோ இருக் கிறார்களாம். ஏதாவது கேட்டு ஏதாவது விசாரித்து வைத்தால் ஒரு வேளை அப்பா இப் போது இருக்கிற இடம் தெரியலாம் என்ற குருட்டு யோசனையுடனும் தைரியத்துடனும் அந்த வீட்டு வாசலுக்குப் போனேன்.

உள் பக்கத்திலிருந்து ஐம்பது வயதுடைய அம்மாள் வெளியே வந்தார்.

''இதுதானே சின்னம்பி வீடு....?'' என்று மந்திரமூர்த்தி சொல்லியிருந்த பெயரைச் சொல்லிக் கேட்டேன்.

என்னைத் தலையிலிருந்து கால் வரை பார்த்த அந்த அம்மாள், ''நீ யாரும்மா....?'' என்று விசாரித்தார்.

''நான் சென்னையில் படித்துக் கொண் டிருக்கிறேன். அந்த வீட்டைச் சேர்ந்த இந்து வும் நானும் கிளாஸ்மேட்....'' என்று உரு வாக்கியிருந்த கற்பனையைச் சொன்னேன்.

''இப்போது அவர்கள் இங்கே இல்லை.''

'' எனக்குத் தெரியும். அவள் என்னுடன் படித்துக் கொண்டிருக்கிறாள். லீவுக்கு அப்பா வுடன் இந்த ஊருக்கு வரப் போவதாகச் சொல்லி இந்த விலாசத்தைக் கொடுத்திருந் தான்'' என்றேன். என் குரலில் பதற்றத்தை மீறிய தைரியம் இருந்தது.

''சின்னம்பி பெண் பெயர் இந்துவா.....? கல்லூரியிலே படிக்கிறாளா அவள்...? அவர்கள் இந்த வீட்டை எங்களுக்கு விற்று விட்டுப் போய்ப் பதினைந்து வருஷத்துக்கு மேல் ஆகிறது. அதற்குப் பிறகு இந்தப் பக்கம் அதிகமாக வரதே இல்லை. அடுத்த தெருவில் அவர்களுக்கு வேண்டியவர்கள் இருக் கிறார்கள். அங்கே போய் விசாரித்துப் பாரு. ஒரு வேளை அங்கே வந்தாலும் வந்திருக்க லாம்'' என்று விலாசம் கொடுத்தார் அந்த அம்மாள்.

மனம் தளராமல் அந்த வீட்டு வாசலிலும் போய் நின்றேன். அங்கே வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்தவர் அறுபது வயதுக்கும் மேலான கிழவர். ''சந்நிதித் தெரு சின்னம்பி லீவுக்கு இங்கே வந்திருக்கிறாரோ....? அவர் பெண் இந்துவும் லீவுக்கு வருவேன் என்று என்னிடம் சொன்னாள். நான் அவளுடன் கல்லூரியில் படிக்கிறேன்'' என்று ஒரேமூச்சில் பல கேள்விகளுக்கும் சேர்த்துச் சொல்லி முடித்தேன்.

'' எந்த ஊரு உனக்கு....?'' என்று கேட்டார் கிழவர்.

'' மதுரை.... அம்மா, அப்பா எல்லாரும் குற்றாலத்துக்கு வந்திருக்கோம். இந்த ஊருக்கு வந்தால் இங்கேதான் தங்குவேன் என்று என் சிநேகிதி சொல்லியிருக்கிறாள் '' என்றேன்.

'' சின்னம்பி போன மாசம் வந்திருந் தான். திரும்பிப் போய்விட்டார்களே — அவர்கள் எல்லாரும்'' என்றார் அவர்.

மேலும் ஏதும் கேட்க வகையறியாமல் திரும்ப அடி எடுத்து வைத்தேன். மந்திர மூர்த்தி கிழவர், அவரால் முடியாது, என்னால் நன்றாக விசாரித்துத் தெரிந்து கொண்டுவிட முடியும் என்று நினைத்தது எவ்வளவு பெரிய தவறு என்று தெரிந்தது. பெயரை மாத்திரம் வைத்துக் கொண்டு, நான் யார் என்று காட்டிக் கொள்ளாமல் அப்பாவைக் கண்டு பிடிப்பது சுலபமான செயல் அல்ல என்று புரிந்தது. ஆயினும் அம்மா என்று ஒருத்தி இருந்தது எவ்வளவு தூரம் நிச்சயமோ அந்த அளவுக்கு அப்பா என்று ஒருவர் இருந்ததும் நிச்சயம். அவர் பெயரும் பிறந்த ஊரும் வீடும் தெரியும். அவர் இப்போது எங்கே இருக்கிறார்....? யாரைக் கேட்பது...?

திருநெல்வேலிக்குத் திரும்பி வந்து மந்திர மூர்த்தியிடம் என் தோல்வியைப் பற்றிச் சொன்னேன்.

அந்த வருஷம்தான் நான் கடைசியாகத் திருநெல்வேலிக்குப் போனது. மந்திரமூர்த் திக்கு வயதாகித் தளர்ந்த நிலையில் அடிக்கடி அம்பாசமுத்திரம் போய் வர முடியாமற் போகவே அவருக்கு உடலில் வலு இருக்கும் போதே அந்த நிலங்களை விற்றுக் கொடுத் தார். நான் படித்து-முடித்துவிட்டுத் திருநெல் வேலி வீட்டுக்கு வந்து உட்கார்ந்து கொண்டு என்ன செய்யப் போகிறேன்? அடுத்த வருஷம் அந்த வீட்டையும் ஒரு வழியாக விற்றுத் திருநெல்வேலி மண்ணை உதறினேன். அத் துடன் தம் கடமையும் முடிந்தது என்று

# போலி உறுப்புகள் மலிவு, உங்கள் உயிர் அப்படியல்லவே

அன்லோடர் வால்வை உதாரணமாக எடுத்துக்கொள்வோம்:

இது பிரேக் சிஸ்டத்தின் காற்றழுத்தத்தை பாதுகாப்புக்கு வேண்டிய அளவில் வைத்துக் கொள்ள உதவுகிறது. இருக்கவேண்டிய காற்றழுத்தம் எப்போதாவது குறிப்பிட்ட அளவுக்கு அதிகமாகிவிட்டால், 'அன்லோடர் வால்வ்' அந்த அதிகமான காற்றை மட்டும் வெளிப்படுத்தி அதிக காற்றழுத்தத்தினால் ஏதாவதொரு கெடுதலும் பிரேக்கிற்கு ஏற்படாதவாறு காக்கிறது.

அதுபோலவே, காற்றழுத்தம் குறிப்பிட்ட அளவுக்கு குறைந்துபோனால் உடனுக்குடன் காற்றை சிஸ்டத்தினுள் புகுத்தும் கருவி இயங்கி, காற்றழுத்தத்தை வேண்டிய அளவுக்கு ஏற்றுகிறது.

குறிப்பிட்ட அளவுக்கு காற்றழுத்தம் பிரேக் சிஸ்டத்தில் இருந்து கொண்டிருந்தால்தான் போட்டவுடன் பிரேக் இயங்கி வண்டியை நிறுத்தும்.

ஆகவே சகலப் பாதுகாப்பைக் கெடுக்க ஒரே ஒரு போலி உறுப்பு போதும்.

போலி உறுப்புகள் உயிருக்கு அபாயம் ஏற்படுத்தலாம்.

காற்றழுத்த பிரேக்குகட்கு எப்போதும் CD-TVS அசல் உறுப்புகளே பொருத்துவதே பாதுகாப்பாகும்.

**உண்மையான ஃபுல் ஏர்/ஏர் அஸிஸ்ட் பிரேக்குகளின் உறுப்புகள் CD-TVS கம்பெனியால் மட்டுமே தயாரிக்கப்படுகின்றன**




எப்போதும் CD-TVS தயாரிக்கும் அசல் உறுப்புகளையே கேட்டு வாங்குங்கள்

**சுந்தரம்-க்ளேட்டன் லிமிடெட்,**
(டிவிஎஸ் தொகுப்பைச் சேர்ந்த நிறுவனங்களில் ஒன்று)
பாடி, சென்னை-50





வண்டிகளின் விநியோகஸ்தர்களிடமும் எங்களுடைய பிராந்திய விநியோகஸ்தர்களிடமும் கிடைக்கிறது

தமிழ்நாடு, மைசூர், கேரளா, ஆந்திரப்பிரதேசம், பாண்டிச்சேரி மற்றும் கோவா பிரதேசங்களுக்கு விநியோகஸ்தர்கள்:

**மதராஸ் ஆட்டோ சர்வீஸ்**
உரிமையாளர்: T. V. சுந்தரம் ஐயங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்
97, மவுண்ட் ரோடு, சென்னை - 6

சொல்வதுபோல் மந்திரமூர்த்தியும் மறைந்து போனர்.

ஒரு வழியாகப் பரீட்சைகள் முடிவடைந்து விட்டன. கடைசி வருஷ மாணவிகள் எல்லாரும் மறுபடியும் இங்கே வரப் போகிறோம் என்ற கவலை இன்றி, விடுபட்ட நிம்மதியுடன் அவரவர்கள் மூட்டை முடிச்சைக் கட்டுகின்றனர். நான்கு வருஷங்களாக இந்த ஹாஸ்டலில் வீட்டைவிட அதிக சுதந்திரத்துடன் ஓடிப் பாடிக் கழித்துவிட்டுக் கிளம்புவது மனத்துக்கு ஒருவித சோகமூட்டுவதாக இருக்கிறது. ஆனால் இதைவிடப் பிரகாசமான எதிர்காலத்தை எதிர்நோக்கும் தயாவும் பானுவும் மைதிலியும் ஒருவருக்கொருவர் உற்சாகமாகச் சொல்லிக் கொண்டு கிளம்புகிறார்கள். பானு கடைசிப் பரீட்சை முடிந்த இரவே தில்லிக்குக் கிளம்புகிறாள். அநேகமாக ஹாஸ்டல் முழுவதும் பதினைந்தும் தேதியே காலியாகி விடுகிறது. நான் பதினேழாம் தேதி திருநெல்வேலிக்குக் கிளம்பப் போவதாக என்னைக் கேட்பவர்களிடம் சொல்கிறேன். திருச்சிக்கும் மதுரைக்கும் போகும் இரண்டு மூன்று பேர் தங்களுடன் வரச் சொல்லி என்னை வற்புறுத்துகிறார்கள். அதை மறுத்துவிட்டு எல்லோரும் போனபிறகு என் பிரயாணத்தை வைத்துக் கொள்கிறேன்.

தயா கோவைக்குக் கிளம்புகிறாள். அறையைக் காலி செய்து டாக்ஸியில் சாமான்களை ஏற்றியானவுடன் தயா என்னைக் கட்டிக் கொள்கிறாள். அவள் கண்கள் குளமாகின்றன. "காந்தி.... யாரை மறந்தாலும் என்னை மறந்துவிடாதே.... மற்றவர்களைப் போல் இல்லை நமக்கிடையே உள்ள உறவு. நாலு வருஷங்கள் இதே அறையில் ஒன்றாக எழுந்து, ஒன்றாகச் சாப்பிட்டு, ஒன்றாகத் தூங்கினோம். இதோடு நம் ஒட்டுதல் தீர்ந்து விட்டது என்று இருந்து விடாதே. நீ யாருடனும் ஒட்டமாட்டாய் என்று எனக்குத் தெரியும். அதனால் இப்போதே சொல்லி வைக்கிறேன். அடுத்த மாதமே என் கல்யாணப் பத்திரிகை வரும். நிச்சயம் வா. வராமல் இருந்து விடாதே. நீ வராவிட்டால் கல்யாணத்தைப் பாதியில் நிறுத்திவிட்டு நான் உன் வீட்டுக்கு வந்து விடுவேன்" என்கிறாள்.

ஸ்டேஷன். கடைசி நிமிஷப் பிரிவு சொல்ல முடியாத வேதனையாக இருக்கிறது. அவளிடம் மாத்திரம் என் சென்னை விலாசத்தையும் கொடுத்து ஒரு வேளை இங்கே வந்து இருந்தாலும் இருப்பேன் என்று சொல்கிறேன். அவளை முழுவதும் ஏமாற்ற மனம் வரவில்லை.

ரயில் கிளம்புகிறது. எங்கோ பிரகாசமான எதிர்காலமும், உயிருக்குயிராக நேசிக்கும் அம்மா, அப்பா, அக்கா, தங்கை, அண்ணா, தம்பி, இல்லியில் அவளை நினைத்து ஏங்கும் வருங்காலக் கணவர் இத்தனை பேர் இருந்தும் தயா என்னுடைய பிரிவைச் சகியாமல் கண்களில் கண்ணீர் கசிய விடை பெற்றுக் கொள்கிறாள்.

பிளாட்பாரத்தை விட்டு வெளியே வருகிறேன். இருந்த கடைசி உறவும் விட்டது. பிரிவால் தயா துடிக்கும் அளவுக்கு என் மனம் துடிக்கவில்லை. ஏதாவது கோரும




ஜெகசிற்பியன் எழுதும்

# அஜநயனம்

ஜீன் 27

மாவது சுவைத்திருந்தால்தான் அதன் முழுச் சுவையைப் பற்றியும் தெரியும். உறவு, அன்பு என்ற சுவையே தெரியாதிருந்து விட்டால் பிறகு கவலை ஏது, ஏக்கம் ஏது?

படிப்பு என்ற பெரிய சமுத்திரத்தைத் தாண்டி, வாழ்க்கை என்ற நீண்ட கரை ஏறி விட்ட பின்னர் மேற்கொண்டு என்ன செய்வது என்று எதுவுமே புரியாமல் நாட்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் போய்க் கொண்டேயிருக்கின்றன.

வேறு வேலை ஏதும் இல்லாமல் உட்கார்ந்திருக்கும் நாளில் அப்பா என்ற இந்த மனிதர் யார், இப்போது எங்கே இருக்கிறார் என்று திருப்பித் திருப்பிச் சிந்தனை ஓடுகிறது. மறுபடியும் ஏதாவது முயற்சி எடுத்து அவரைத் தேடிப் பார்க்கலாமோ என்று நினைக்கிறேன்.

ஒன்றை ஒன்று துரத்திக் கொண்டு நாட்கள் நகருகின்றன. டிரெயினிங் கல்லூரி திறக்கும் நாளை எதிர்பார்த்துக் கொண்டு வேறு ஏதும் வேலை இன்றி, சிந்தனை இன்றி, செயல் இன்றி, பற்றின்றி, பாசமின்றி நாட்களைக் கடத்துகிறேன். இந்த உலகில் என்னை விடப் பெரிய ஞானி, சந்நியாசி யார் இருக்க முடியும் ?

ஒரு நாள் காலைத் தபாலில் தயாவின் கல்யாணப் பத்திரிகை வருகிறது. கல்யாணம் கோவையில்தான் நடக்கும் என்று என்னிடம் சொல்லியிருந்தாள். பத்திரிகையைப் பிரித்தால் சென்னையில் நடப்பதாகப் போட்டிருக்கிறது. பத்திரிகையுடன் கடிதம் ஒன்றும் இருக்கிறது. தயா எழுதியிருக்கிறாள், என்னை நிச்சயம் முதல் நாள் மாலையே எதிர்பார்ப்பதாக. நான் கல்யாணத்துக்கு வராமல் இருந்து விட்டால் கல்யாணத்தைப் பாதி

யில் நிறுத்திவிட்டு என்னைத் தேடிக்கொண்டு வந்து விடுவாளாம் !

கல்யாணத்துக்கு முதல் நாள் மாலை கல்யாண மண்டபம் இருக்கும் தியாகராய நகருக்குக் கிளம்புகிறேன். வாசலில் டாக்ஸியிலிருந்து இறங்கித் தயங்கித் தயங்கி உள்ளே போகிறேன். ஐந்தாறு பெண்களுக்கு நடுவில் உட்கார்ந்திருக்கும் தயா என்னைக் கண்டதும் ஓடி வந்து கையைப் பிடித்துக் கொண்டு போய் அருகில் இருந்தவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்துவிட்டு டிபன் சாப்பிட அழைத்துக் கொண்டு போகிறாள். கல்லூரி மூடி இரண்டு மாதங்களே ஆகியிருந்தாலும் எங்களுக்கிடையில் ஒரு வருஷம் பேசியாக வேண்டிய விஷயங்கள் இருக்கின்றன.

இருட்டிய பின்னர் எல்லோரும் மாப்பிள்ளை அழைப்புக்குக் கிளம்புகின்றனர்.

''நீயும் அவர்களுடன் போய்விட்டு வாயேன்'' என்று தயா சொல்லவே நானும் கிளம்புகிறேன்.

மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் கல்யாண வீட்டை அடையும் நேரம். கோயிலிலிருந்து கிளம்பியதிலிருந்து இதுவரை எல்லோரிடமும் மாறி மாறிக் கலகலப்பாகச் சிரித்து முழக்கிய படி பேசிக் கொண்டே வந்த ஒரு வயதான அம்மாள் காதில் வைரத்தோடு தொங்கி ஆட, பரங்கிப் பழம் போன்ற முகத்தில் குங்குமம் பளிச்சிட என் அருகில் வந்து மெதுவாகப் புன்னகை செய்துவிட்டு, ''தயாவின் சிநேகிதியாம்மா நீ?'' என்று தாமாக விசாரிக்கிறார்.

'' ஆமாம் !'' என்று தலையை மட்டும் ஆட்டுகிறேன்.

'' எந்த ஊர் உங்களுக்கு....?''

எங்கோ உடல் பாரம் தெரியாமல் கனவுலகில் ஆகாச தேவதை போல் கால்கள் பூமியில் படாமல் நீந்திக் கொண்டிருந்த என்னை அந்த அம்மாளின் கேள்வி கீழே இந்த உலகத்துக்குக் கொண்டு வந்து விடுகிறது. அவர் கேட்ட கேள்விக்குப் பதில் அளிக்க இரண்டு நிமிஷம் ஆகிவிடுகிறது. ''எனக்கு... திருச்சி'' என்று முன்னமேயே முடிவு பண்ணி வைத்திருந்த பொய்யைச் சொல்லி வைக்கிறேன்.

''திருநெல்வேலி'' என்று சொல்லி, அங்கே எந்த இடம் சிவபுரமா, ராஜ வீதியா, வண்ணார்ப்பேட்டையா, பெருமாள்புரமா என்று மேலும் மேலும் கேள்வி எழுந்தால் ஏதாவது சொல்ல வேண்டி வருமோ என்ற பயத்தில். நல்ல வேளையாக, அந்த அம்மாள் மேலும் கேள்விகள் தொடுக்குமுன் ஊர்வலம் கல்யாணப் பந்தலை நெருங்குகிறது.

காரிலிருந்து மாப்பிள்ளை இறங்கி உள்ளே போனதும் எல்லோரும் உள்ளே நடக்கிறோம். தயாவிடம் போய் மாப்பிள்ளையைப் பற்றி என் அபிப்பிராயத்தை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறேன். அடுத்த நிகழ்ச்சிக்காக அவளை அலங்கரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

சாப்பாடு முடிந்ததும் தயாவுடன் அவளுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் அறைக்குப் போகிறேன்.

''தயா, பேசிக் கொண்டே இராதே! காலை நாலு மணிக்கு எழுந்திருக்கணும். சீக்கிரம் தூங்கு'' என்று அவள் அம்மா வந்து சொல்லி விட்டுப் போகிறார்.

தயாவும் நானும் பக்கத்தில் பக்கத்தில் படுத்துக் கொள்கிறோம். இம்மாதிரிக் கல்லூரி நாட்களில் ஐந்து வருடங்கள் கழித்திருக்கிறோம். ஹாஸ்டலில் சேர்ந்த முதல் நாள் இரவு எனக்கு நினைவு வருகிறது. திருநெல்வேலியிலிருந்து வந்த புதிதில் தாவணியையும் பாவாடையையும் விட்டு விட்டுப் புடவை அணிந்து கல்லூரி மாணவியாக ஹாஸ்டல் அறையின் தனிமையில், எதிரில் 'ஹோ' என்று ஆர்ப்பரிக்கும் கடலைத் தவிர சுற்று வட்டாரத்தில் குடியிருப்புக்களே இல்லாத அந்தத் தனிமைப் பகுதியில், முன்பின் தெரியாத ஒரு புதுப் பெண்ணுடன் தனி அறையில் தனித் தனி கட்டில்களில் படுத்துக் கொண்டு தூக்கம் வராமல் புரண்டு புரண்டு படுத்த அன்றைய இரவு இப்போது நினைவுக்கு வருகிறது. என் பயத்தை வெளியில் சொல்லிக்கொள்ள முடியாமல் நானும், அவள் பயத்தை வெளியில் காண்பித்துக் கொள்ள முடியாமல் அவளும் மனசுக்குள் தவித்த நாள் நேற்றைக்கு நடந்தது போலிருக்கிறது.

காலை கண் விழித்த போது தயா அருகில் இல்லை. எழுந்து கண்களைக் கசக்கிக் கொண்டு வெளியே வந்தால் ஹாலில் ஒரே பரபரப்பாக இருக்கிறது. புதுப் புதுப் பட்டுப் புடவைகள் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டே இருக்கின்றன. தயா அவள் அப்பாவின் அருகில் மணையில் உட்கார்ந்திருக்கிறாள். இன்னும் விடியவில்லை. மணி ஐந்துகூட ஆகியிராது. அரை மணி நேரம் அங்கே இருந்து விட்டுத் தயா எழுந்து வருகிறாள்.

உள்ளே தயாவுக்கு அலங்காரம் நடக்கிறது. அந்த வேலையில் ஐந்தாறு பேர் ஈடுபட்டிருக்கிறார்கள். தலை முழுவதும் புஷ்பத்தால் மறைத்து, அதன் மீது ஜடைபில்லை வைத்துக் கண் நிறைய மைதீட்டிக் கழுத்துத் தாங்காமல் நகைகளும் உடல் முழுவதும் தகதகக்கும் வைர ஊசிப் புடவையுமாக, இதுவரை நான் பார்த்திராத தயாவாக மாறுகிறாள் அவள். காட்டாற்று வெள்ளம் போல் வீடு முழுவதும் பரபரப்பு. ''உம்... உம்... சீக்கிரம்! ஆச்சா? பரதேசக் கோலம் கிளம்பியாச்சு. தாமதப் படுத்தாதேங்கோ... ஆறரை மணிக்கு முகூர்த்தம்....'' என்று யார் யாரோ உள்ளே எட்டிப் பார்த்து முடுக்கிக் கொண்டேயிருக்கிறார்கள்.

அப்புறம்...?

கெட்டி மேளம் முழங்க, அப்பாவின் மடியில் தயா அமர, மாப்பிள்ளை இடத்திலிருந்து எழுந்து வந்து எதிரில் நின்று அவள் கழுத்தில் மாங்கல்ய தாரணம் செய்ய, பூமாரி பொழிய, தயாவின் உயிரும் மெய்யும் சிலிர்த்தெழ, அவளைப் பார்த்துப் பெற்றவர்கள் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் பெருக்கக் கல்யாணம் முடிகிறது.

மாலை ஐந்து மணி இருக்கும்.

''தயா எங்கே?...?'' என்று கேட்டுக் கொண்டே வருகிறார் அவள் அப்பா.

''கல்லூரித் தோழிகள் வந்தார்கள். அவர்களுடன் வாசல் வரையில் போயிருக்கிறாள்'' என்கிறேன்.




# இப்போது புத்தம் **புதிய** பாக்கெட்டில் உங்களுக்கு கிடைக்கிறது




# ஓஓபி நீலம்

## "மனதிற்குகந்த தூய வெண்மை தருகிறது"

ஓ ஓ பி நீலம் முழுவதும் உடனடியாக கரைந்துவிடுகிறது.

வெள்ளைத்துணிகள் மேலும் பால்போன்று வெண்மையாகின்றன.

நீலப்புள்ளிகளோ மஞ்சள்நிற திட்டுகளோ விழுவதில்லை.



ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவோடு இந்தியாவில் மிகவும் நவீனமான அல்டிராமரைன் தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது.

தயாரிப்பாளர்கள்:
அல்டிராமரைன் அண்டு
பிக்மென்ட்ஸ் லிமிடெட்
அம்பத்தூர், சென்னை-58

UPL-4363

# நல்ல தேநீர் ரசிக்கப்படும் எல்லா இடங்களிலும் — குடும்பங்கள் விரும்பி வாங்குவது லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்

குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் விரும்பி அருந்தும் டீ இதுவே. விருந்தினர்களும் அவ்வாறே. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் திருப்தியளிக்கும் மணமுள்ள சத்து நிறைந்த, ருசிமிக்க கெட்டியான பானம். ஒவ்வொரு பாக் கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் உங்கள் குடும்பத்தார் அருந்தி மகிழ்வது. விருந்தினர்கள் விரும்பி அருந்துவது.

HIMALAYAN

GOLDEN DUST TEA

LIPTON'S

FINEST

GOLDEN DUST TEA

பாக்கிங் செய்த தேயிலை மட்டுமே புதிதாகவும், மணத்துடனும் திகழ்கிறது.

**லிப்டன் என்றாலே நல்ல டீ**



அவர் ஓய்ந்து போய் நாற்காலியில் அப்பாடா என்று உட்காருகிறார். அவரைப் பார்க்கப் பாவமாக இருக்கிறது. நேற்று மாலை பிள்ளை வீட்டார் வந்து இறங்கியதிலிருந்து அவர் ஓரிடத்தில் உட்கார்ந்து கொள்ளாமல் இங்கும் அங்குமாகப் பறந்தபடி அத்தனை ஏற்பாடுகளையும் கண்காணித்துக் கொண்டே இருக்கிறார்.

"உன் பேர் என்னம்மா?" என்று கேட்கிறார்.

"காந்திமதி" என்கிறேன்.

"தயாவுக்குக் கல்லூரித் தோழிகள் அத்தனை பேர் இருந்தும் நீமாத்திரம்தான் நட்பை மறக்காமல் கல்யாணத்துக்கு வந்திருக்கிறே போலிருக்கு. உனக்கு எந்த ஊர்?"

"திருச்சி..."

"திருச்சியா? திருச்சியிலே எங்கே?"

"ஆண்டார் வீதி."

"ஆண்டார் வீதியா? வக்கீல் ஹாலாஸ்யம் வீடு இருக்கிறதே அதற்குப் பக்கத்திலேயா?"

"ஆமாம்" என்கிறேன், தலை குனிந்தபடியே. மேலும் என்னென்ன கேட்டுக் குழப்புவாரோ என்று பயமாக இருக்கிறது.

அவர் சற்று யோசித்துவிட்டு "திருச்சியிலே ஹோலி கிராஸ், சீதாலட்சுமி ராமசாமி கல்லூரி எல்லாம் இருக்கும்போது சென்னைக்கு வந்து ஏன் படிச்சே?" என்று கேட்கிறார்.

மென்று விழுங்குகிறேன். "இங்கே ஹாஸ்டல் வசதியாக இருந்தது..."

"அப்பா என்ன பண்ணிண்டிருக்கிறார்?"

"அப்பா இல்லே."

"அப்படியா....? த்ச...த்ச... நான்கூட ரொம்ப வருஷங்களுக்கு முன்னாலே திருச்சியிலே இருந்திருக்கிறேன். எந்தப் பள்ளிக்கூடத்திலே படிச்சே?"

தயா வந்து என்னைக் காப்பாற்ற மாட்டாளா என்று தவியாய்த் தவிக்கிறேன். வெளியில் எட்டி எட்டிப் பார்க்கிறேன். அவள் வரும் வழியாக இல்லை.

"நேஷனல் பெண்கள் உயர்நிலைப் பள்ளி."

"நேஷனல் பெண்கள் பள்ளியா? நேஷனல் பாய்ஸ் ஸ்கூல் மாத்திரம்தானே இருந்தது? இப்போ பெண்கள் பள்ளியும் வந்துவிட்டதா? அதே மானேஜ்மெண்டா?"

"ஆமாம்."

தயா சீக்கிரம் வந்துவிட மாட்டாயா?

"அட்வகேட் ஹாலாஸ்யம் வீட்டுக்கு எதிரில் சங்கரன் என்ற டாக்டர் பிராக்டிஸ் செய்கிறாரே, அவரைத் தெரியுமோ?"

"தெரியாது."

"தெரியாதா?" ஹாலாஸ்யம் வீட்டுக்குப் பக்கத்தில்தானே உன் வீடு என்று சொன்னே? இப்ப நீங்க திருச்சியிலே இல்லையா?"

"ஆமாம். இப்ப நாங்க அங்கே இல்லே..."

"இப்ப எங்கே இருக்கிங்க?"

"சென்னையிலேதான்."

நல்ல வேளை. தயா வந்து விடுகிறாள். எனக்கு உயிர் வருகிறது. இந்த ஐந்து நிமிஷங்கள் பட்ட சங்கடம் போதும். மேலும் இரண்டு நிமிஷங்கள் இவரிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டாலும் ஏதாவது உளற வேண்டி வந்திருக்கும். தயாவிடம் சொல்லிக்கொண்டு நானும் கிளம்பிவிட வேண்டியதுதான்.

## புதுமைப் பணி, புனிதப் பணி

மாதர்களுக்காக மாதர்களால் நடத்தப்படும் மாதர் சங்கம்தான். ஆனால் இங்கு மாதர்கள் கூடி அரட்டை அடிப்பதில்லை; டென்னிஸ் ஆடுவதில்லை; பூவேலை, தையல் வேலை என்றெல்லாம் ஒன்றும் கிடையாது. பழச்சாறு பிழியவோ, சமைக்கவோ கற்றுக் கொடுக்கிறார்களோ என்றால் அதுவும் கிடையாது. பிறகு என்னதான் செய்கிறார்கள்? வேறு பல மாதர் சங்கங்கள் செய்யாத புதுமையான புனிதப் பணிகளைச் செய்கிறார்கள், ஸ்ரீ கற்பகாம்பிகா திருவருள் சங்கத்தினர். இதோ பட்டியல்:

1. மாதம் ஒரு முறை மாதர்கள் ஓரிடத்தில் கூடி நாட்டு மக்கள் நலம் பெற, பெண்ணினம் பெருமை பெறப் பிரார்த்தனை, பஜனை செய்வது. 2. நம் பண்டிகை தினங்களில் சிறந்த உபந்யாசங்களுக்கு ஏற்பாடு செய்து ஆஸ்திகத்தை வளர்ப்பது. 3. திருமணத்துக்கு மாங்கல்யம் பரிசளித்து உதவுவது. 4. தமிழ் நாட்டுத் திவ்விய ஸ்தலங்களுக்குச் சென்று தரிசனம் செய்து இறையருளுக்குப் பாத்திரங்களாவது. 5. ஏழை மாணவிகளுக்குப் பரீட்சைக்குப் பணம் கட்டுவது. 6. வறுமையும் நோயும் உள்ள குடும்பத்துக்கு உதவுவது. 7. ஆஸ்பத்திரிகளில் உள்ள நோயாளிகளுக்கு விபூதி, குங்குமப் பிரசாதம் கொண்டு கொடுப்பது. 8. திருமணத்துக்கு இடம் ஏற்பாடு செய்து கொடுத்து உதவுவது.

மேற்படி நற்கருமங்களை மேற்கொண்டுள்ள சங்கத்தின் அமைப்பாளர்கள் ஸ்ரீமதி சரோஜினி வரதப்பனும், ஸ்ரீமதி வசுமதி ராமசுவாமியும் ஆவர்.

ஆனால் தயா என்னைப் போகக் கூடாது என்று பிடிவாதமாகத் தடுக்கிறாள். "உன்னை விட்டால் எனக்குப் பேசக்கூட இங்கே யாரும் இல்லை. நீயே பாரேன். தயவுசெய்து போக வேண்டாம். உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். நாளையிலிருந்து உன்னைக் கேட்கப் போகிறேனா? ப்ளீஸ்... ப்ளீஸ்!" என்று கையைப் பிடித்துக் கொள்கிறாள்.

என்னால் அவள் பேச்சை மீற முடியவில்லை.

'அன்றிரவு தயாவுக்கு வாழ்க்கையின் முதலிரவு' — இப்படித் தயாவின் அம்மா சொன்னதைக் கேட்ட எனக்கு அன்றைய இரவு தனி இரவு ஆகிறது.

மறு நாள் காலை கண் விழித்து எழுந்து அறையை விட்டு வெளியே வந்தபோது தயா பின் பக்கத்திலிருந்து கையில் காப்பித் தம்ளரும் டபராவுமாக மாடிப் படி ஏறிக் கொண்டிருக்கிறாள். அதற்குள் குளித்து வேற்றுடை அணிந்து ஈரத் தலையைப் பின் முடிச்சுப் போட்டுக் கொண்டு என்னைப் பார்த்துச் சிரிக்கிறாள். ஒரே நாளில் அவள் உருவத்தில், முகத்தில், நடையில், கண்களில் எவ்வளவு மாறுதல்!

நேரம் ஆக ஆக, அவரவர்கள் மூட்டை முடிச்சுகளைக் கட்டுவதில் ஈடுபட்டிருக்கின்றனர். தயாவின் துணி மணிகளை அவள் சகோதரி எடுத்து ஒரு பெட்டியில் இது வேண்டுமா, அது வேண்டுமா என்று கேட்டுக் கேட்டு அடுக்கி வைக்கிறாள். அவர்கள் எல்லோரும் காலை பத்து மணி ரயிலில் மதுரைக்குப் போவதாக இருக்கிறார்கள். மதுரைதான் பிள்ளையின் ஊராம். நான் ஸ்டேஷன் வரை

போய் வழியனுப்பி விட்டு அப்படியே நூலகம் பக்கம் போவதாக இருக்கிறேன். இனி அவளும் நானும் சேர்ந்திருப்பது என்று எங்கே முடியப் போகிறது? கல்லூரியில் எத்தனையோ பேரிடம் பழகினேன். ஆனாலும் இவளிடம் ஏற்பட்ட ஒட்டுதல் வேறு யாரிடமும் ஏற்படவில்லை. எனக்கு இருந்த ஒரே ஒட்டுதலும் இதோ கடைசி கடைசியாகப் பிரியப் போகிறது...

தயா மீண்டும் பெட்டியை ஒரு முறை திறந்து பார்த்து உடைகளையும் மற்றவைகளையும் சரிபார்க்கிறாள். ''கிளம்பியாச்சா, தயா?'' என்று கேட்டுக் கொண்டே அவள் அப்பாவும் அம்மாவும் வருகிறார்கள். அந்தச் சமயம் பார்த்து மாடியிலிருந்து வந்த ஒரு பெண் தயாவையும் அவள் அம்மாவையும் அழைக்கவே இருவரும் வெளியே போகின்றனர். யாரிடம் தனியாக மீண்டும் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது என்று நினைத்துக் கொண்டிருந்தேனோ, அவருக்கு எதிரே மறுபடியும் தனித்து நிற்கும்படியாகி விடுகிறது.

''ஆமாம், திருச்சியில் யார் வீடு என்று சொன்னாய்?'' என்று நேற்று விட்ட இடத்திலிருந்து பேச்சை ஆரம்பிக்கிறார். தயா திரும்பி வரும்வரை நேரம் போக்க ஏதாவது பேசிக் கொண்டிருக்கலாமே என்பது அவர் வரை ஒரு பொழுதுபோக்கு. எனக்கு?

முதல் பொய்யைத் தொடர்ந்து முடிந்த மட்டும் சொல்லிக் கொண்டே போக வேண்டியதுதான்.

''சரவணன் வீடு.''

''என்ன வேலை பார்த்தார்?''

ஆண்டவனே! சரியான சமயம் பார்த்துத் தயா என்னை இப்படித் தவிக்க விட்டு விட்டுப் போய் விட்டாளே!

''வாத்தியாராக இருந்தார்!''

''எனக்கு உன்னை எங்கேயோ பார்த்தமாதிரி இருக்கிறது. திருநெல்வேலியிலே எப்பவாவது இருந்திருக்கியா? அங்கேதான் எங்கேயோ உன்னையோ, அல்லது உன்னைப் போன்ற வேறு ஒருவரையோ பார்த்த மாதிரி நெஞ்சில் இருக்கிறது...''

கால்களிலிருந்து பூமி நழுவுகிறது. இப்போது பார்த்துத் தயா வந்து சேர்ந்து அப்பா அவளிடம் ஏதாவது கேட்கப் போக ''இவளுக்குத் திருநெல்வேலிதான்'' என்று சொல்லி வைத்தால் நான் கட்டிய பொய் மாளிகை ஒரு கணத்தில் சிதறுண்டு போகுமே!

''ஆமாம்... எனக்குச் சொந்த ஊர் திருநெல்வேலிதான்'' என்று எப்படியோ சொல்லி முடிக்கிறேன். மேலும் பொய் சொல்லிக் கொண்டே போனால், அகப்பட்டுக் கொள்ள வேண்டியதுதான் என்று தோன்றுகிறது.

''எங்கே வீடு அங்கே?''

''மாட வீதிப் பக்கம்...''

தயாவும் அம்மாவும் வேகமாக உள்ளே வருகிறார்கள். ''என்னப்பா இது, பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? வாசலில் டாக்சி வந்துவிட்டது. அவர்கள் எல்லோரும் கிளம்பியாகிவிட்டது. மணி ஒன்பதே கால்'' என்கிறாள் தயா. அவர் வெளியே போகிறார்.

எனக்குக் குளிர் விட்டுப் போய்விட்ட மாதிரி இருக்கிறது. இனிமேல் யாரிடமும் வேஷம் போட வேண்டியதில்லை. கேட்டால் திருநெல்வேலிதான் என்று சொல்லிவிட்டுப் போகிறது. அதிலே என்ன? தயாவும் நானும் கல்லூரித் தோழிகள். அவளுக்காக, அவள் கூப்பிட்டு நான் வந்திருக்கிறேன். யாரோ ஒரு பாட்டிக்காகவும், பொழுது போகாவிட்டால் ஊர் வம்படிக்கும் இவள் அப்பாவுக்காகவும் அல்ல. இனிமேல் என்ன...? எல்லோரும்தான் கிளம்பியாகி விட்டதே...

எழும்பூர் ஸ்டேஷன். முதல் மணி அடித்தாகி விட்டது. ஜன்னலருகில் உட்கார்ந்திருக்கும் தயா ''போய்ட்டு வருகிறேன்'' ''போய் விட்டு வருகிறேன்'' என்று மறுபடியும் மறுபடியும் சொல்லிக் கொள்கிறாள். ''டில்லிக்குப் போனதும் எழுதுகிறேன். கடிதத் தொடர்பையாவது விடாமல் வைத்துக் கொள்வோம். நீ ஒருத்திதான் எனக்குச் சிநேகிதி'' என்கிறாள்.

''மதுரையில் எத்தனை நாட்கள் இருப்பாய்?'' என்று கேட்கிறேன்.

''இரண்டு மூன்று நாள்தான் இருப்போம், பிறகு குற்றாலம் போகலாம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார். சீஸனாக இருப்பதால் ஒரு வாரம், பத்து நாட்கள் தங்குவோம். நீ எப்போது திருநெல்வேலிக்குப் போகப் போகிறாய்?'' என்று கேட்கிறாள்.

''ஒரு மாதம் ஆகலாம்..''

கார்டு விசில் ஊதிக் கொடி காட்டுகிறார்.

''ஒருவேளை இப்போது நீ திருநெல்வேலி வர நேர்ந்தால் அப்படியே தென் காசிக்கு வாயேன். நாங்கள் அங்கேதான் தங்குவோம். அப்பாவின் பூர்விக வீடு அங்கே இருக்கு. தென்காசியிலே சந்நிதித் தெரு, தேரடிக்கு நேர் எதிர் வீடு. அதை விற்றுவிட்டோம். அங்கே வந்து அப்பா பேரைச் சொல்லி விசாரித்தால் தெரியாது. சின்னம்பி என்று கேட்டால்தான் தெரியும். நாங்கள் தங்கியிருக்கும் வீட்டை அவர்கள் சொல்லுவார்கள்.''

ரயில் பெரிதாக ஊதிவிட்டு நகர்கிறது.

எதிர்பாராமல் இருக்கும்போது பொட்டில் ஓங்கி அறைந்தது போல் வலி ஏற்பட நான் சிலையாக அப்படியே நின்ற நிலையில் நிற்கிறேன். என் பார்வை தயாவுக்கு எதிர் பெஞ்சில் ஜன்னல் ஓரத்தில் உட்கார்ந்து என்னையே பார்த்துக் கொண்டிருக்கும் அவள் அப்பாவைப் பார்த்தபடி இருக்கிறது. கண்களில் உருவம் தெரியவில்லை.

பத்துத் தப்படி போனதும் ரயில் நிற்கிறது. உடனே கிளம்பவில்லை. எல்லோரும் வெளியே எட்டி எட்டிப் பார்க்கிறார்கள். என் கால்கள் என்னையே பார்த்துக் கொண்டிருக்கும் அந்த ஜன்னலருகில் என்னை இழுத்துக் கொண்டு போகின்றன. அருகில் போனதும் புதிதாகப் பார்ப்பது போல் தயாவின் அப்பாவையே பார்க்கின்றன கண்கள். அவர் கண்களிலும் கண்ணீர் மறைப்பது தெரிகிறது. அவர் கையை நீட்டி என் தலையைத் தடவிக் கொடுக்கிறார். ''காந்தி... தயாவுக்கு ஆனமாதிரி உனக்கும் கல்யாணம் நடக்கும்... எப்போது நடந்தாலும் எனக்குக் கடிதாக போடு. நிச்சயம் வருகிறேன்...'' என்று தழுதழுக்கிறார்.

ரயில் நகருகிறது.

# பொறுமை

''ஸ்வாமி! பல இடங்களில் அதிக மழையால் சொல்லொணுத் துன்பம்'' என்றார் மில் முதலாளி நாகரத்தினமய்யர்.

''ஆம், கேள்விப்பட்டேன்'' என்றார் ஸ்ரீ தனிமையானந்த முனிவர். அவருடைய விடையில் விசேஷ அனுதாபமோ தீவிர உணர்ச்சி எதுவுமோ தொனிக்க வில்லை; அசட்டையும் இல்லை.

''அப்படியானுல் அவ்விடத்துத் திருவுள்ளம் இக்கஷ்ட நஷ்டச் செய்திகளைக் கேட்டு... பாதிக்கப்பட வில்லையா?'' என்ற சந்தேகத்தைக் கிளப்பி நூதனமான, நுட்பமான ஒரு தத்துவ விளக்கத்தை எதிர்பார்த்தார் மிடர் நாகரத்தினம். கன்று ஆசையுடன் முட்டினுல் இன்னும் நாலு சொட்டுப் பால் கரக்கலாம்; கடைசிப் பாலில் வெண்ணெய்ச் சத்து அதிகம்.

முனிவர் சற்று மௌனம் சாதித்து, பிறகு இலேசான உட்சிரிப்புடன், ''சொத்துரிமை, சுக வாழ்வு, நீடித்த உயிர், இவற்றில் அபிலாஷை, ஆகாங்க்ஷை உள்ளவனுக்கு இந்நிலையில் மனம் சஞ்சலம் அடையலாம்'' என்றார்.

''உண்மை... ஒரு சிறு மனத் திருப்தியைத் தெரிவிக்கிறேன். தவருக நினைத்துக் கொள்ளக் கூடாது.''

''சொல்லும்.''

''நான்... கஷ்ட நிவாரண நிதிக்கு இரண்டு லட்சம் அனுப்பியிருக்கிறேன்.''

''சந்தோஷம்.''

''இன்னும்கூட அனுப்ப விருப்பந்தான். ஆனுல் இந்த வருமான வரி பசி தீரா வயிருக இருக்கிறது.''

''சில மாதிரி நன்கொடைகளுக்கு வரிச் சலுகை காட்டுவார்களே!''

''அது எல்லையற்றதல்ல, ஒரு விகிதம் வரைதான். முனிவர் தூண்டுதலால், அதாவது அருள் கட்டளையால், அந்த எல்லையைக் கடந்து விட்டேன்.''

''இருக்கட்டும். மன்னனுக்குரியது மன்னனுக்கு; மானிடனுக்குரியது மானிடனுக்கு. ஒரு வகையில் இரண்டு லட்சமே பெருந்தொகைதான். பணம் பெறுவதில் பேராசை கூடாது என்பது போல், தர்மம் செய்வதிலும் அதிக ஆசை கூடாது. அது சரி, உங்கள் குமாரன், அருணுசலம் ஒன்றும் சொல்லவில்லையா?''

''அவனுடைய தூண்டுதலே எனக்கு அனுகூலமாக இருந்தது. என்ன விசால புத்தி! அமெரிக்கப் பயிற்சி முடிந்து, என் ஆலைகளில் ஒன்றில் முக்கிய அதிகாரியாகச் சேர்ந்த பின் தன் தேவைக்கான சம்பளந்தான் பெறப் போவதாகச் சொல்கிறான். 'அது எதற்கு? உலக வழக்கம் போல் சம்பளம் வாங்கு; அந்தஸ்துக்குத் தக்கபடி செலவு செய்; நியாயமாக எஞ்சியதைப் பாத்திரமறிந்து தான தர்மம் செய்' என்றால், 'தனி மனிதன் தான தருமம் செய்யாமல் இருப்பதே நல்லது. அப்பா. மில் ஸ்தாபனமே செய்யட்டும். வாங்குதல், கொடுத்தல் என்னும் இரட்டைத் தொல்லை மிச்சம். அகம்பாவம் போன்ற வேறு தீமைகளும் ஒழிகின்றன' என்கிறான்.''

''சந்தோஷம்'' என்றார் முனிவர்.

* * *

''ஸ்வாமி, என் மகன் வந்து விட்டான். பொறுப்பேற்று விட்டான். எல்லாக் காரியமும் திறமையுடன் செய்கிறான். சிப்பந்திகள்—அதிகாரிகள், தொழிலாளிகள் — அனைவரும் அவனை மிகவும் மதிக்கிறார்கள், விசுவாசமாய் இருக்கிறார்கள். மனத்தாங்கல் உள்ளவர்கள் யூனியன் தலைவர்கள்தான். 'கட்டடத்தில் ஒரு சிறு விரிசல் தென்படாதா? அதில் ஓர் ஆலம் விதையை நட்டு, பேணி வளர்த்து, மரமுண்டாக்கி, பெரும் பிளவு உண்டாக்க வாய்ப்புக் கிடைக்காதா?' என்று ஏங்குகிறார்கள். தொழிலாளிகள் தம்மை மறந்தே போய் விடுவார்களே, யூனியன்தான் எதற்கு என்று நினைத்து விடுவார்களே என்று கவலைப் படுகிறார்கள். அருணுசலம் சில நாட்கள் ஒரு தொழிற்சாலைக்குத் தலைவனுக இருந்த பிறகு எல்லா ஆலைகளுக்கும் பொதுவாக எனக்கு அடுத்த ஸ்தானத்தில் அவனை நியமித்துவிட்டேன். அந்தப் பதவிக்காகச் சாதக பட்சிகள் போல் இத்தனை நாட்கள் காத்திருந்தவர்களுக்கு அவர்கள் எதிர்பார்க்கக்கூடியதைக் காட்டிலும் அதிக சலுகைகள் காட்டி அவர்களுக்கு மனத் தாங்கல் அதிகம் இல்லாதபடி செய்து விட்டான் மகன்.....''

''கேட்கக் கேட்க மகிழ்ச்சியாக இருக்கிறது.''

''ஆகவே, இப்பொழுது முழுப் பொறுப்பையும் அவன் கையில் ஒப்படைத்துவிட்டு என் வெகுநாளைய விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள ஆசைப்படுகிறேன். முனிவரிடம் மந்திரோபதேசமும் தீட்சையும் பெற்று சந்நியாசி ஆக விரும்புகிறேன். அருள் புரிய வேண்டும். அதன் பிறகு, ஓராண்டு தேசாடனம். அதற்கப்புறம், இங்கேயே இருக்க எனக்கு அனுமதி கிடைத்தால், மடத்தின் நிர்வாகமும் கவனித்துக் கொள்ள முடியும். நான் சிறியதொரு விதை நட்டேன். பகவானின் அருளாலும் இதர பக்தர்களின் அன்பாலும் அது பெரிய மரம் ஆகிவிட்டது. நல்ல நிர்வாகி இருந்தால் அவ்விடத்துக்குச் சிரமம் குறையும். தனிமையில் ஆனந்தம் கண்டவரை இங்கு இழுத்து வந்து ஒருவித பந்தத்தில் மாட்டி விட்டேன். அதற்குப் பரிகாரம் செய்யச் சமயம் வந்து விட்டது என்று நினைக்கிறேன். இனி இங்கு கூட்டம் கூடத்தான் செய்யும்; ஸ்வாமிகளின் தனிமை நேரத்தைக் குறைக்கத்தான் செய்யும். அதை இனி தவிர்ப்பதற்கில்லை. ஐரோப்பியரும் அமெரிக்கரும்கூடப் பக்தர்கள் ஆகிவிட்டனர். அவர்களுடைய சிரத்தை, மனப்பூர்வ ஈடுபாடு வியப்பளிக்கிறது. நிர்வாகப் பொறுப்பையாவது பெரிதளவு நான் குறைக்கலாம். தனிமையில் விகசிக்கும் தபோநிதியை ஒரு கூட்டம் படையெடுத்துச் சூழும் போது வருத்தமாக இருக்கிறது.....''

''நாகரத்தினம், கூட்டம் சூழும்போது நான் தனிமையின் இன்பத்தை இழந்து விடுகிறேன் என்று வருந்துகிறீரா? நீர் புரிந்துகொண்டது இவ்வளவுதானா?''

''அபசாரம். லோகாயதமாகப் பேசிவிட்டேன். பகவான் தன் னுடைய நிஷ்டையைக் கலைப்பதில்லை என்பதை நானறிவேன்.''

''பரவாயில்லை. வளர்க்க வேண்டாம். நான் இப்பேச்சைத் தொடங்கியிருக்கக் கூடாது. இந்தச் சந்நியாச விஷயம் உம் உறவினருக்கு ...?''

''உறவினர்களுக்கும் இதற்கும் என்ன? உண்மையில் அவர்கள் சந்தோஷப்படுவார்கள். மூன்று நான்கு லட்ச ரூபாய் அவர்களிடையே பிரித்துத் தரப் போகிறேன். அதற்கும் வரித் தொல்லையுண்டு.''

''மனைவிதான் இல்லை. வேறு மக்களும் இல்லை. அருணாசலத்துக்கு.... ?''

''எனக்கு அந்தரங்க உதவியாளராக இருந்தவர் என் பின் இந்த இடத்தில் அமர ஒருவரைத் தேர்ந்தெடுத்துப் பழக்க வேண்டும் என்ற எண்ணம் சில நாட்களாக எனக்கு உண்டு. ஆனால் அந்த ஆள் இளைஞனாக இருந்தால்...''

''எனக்கு அப்படி என்ன வயதாகி விட்டது? நாற்பத்தொன்பது நடக்கிறது.




'' அவன் மனப்பான்மை பகவானுக்குத்தான் தெரியும். நான் எட்டடி பாய்ந்தால் அவன் பதினாறு அடி பாய்கிறான். பூர்வஜன்ம சம்ஸ்காரம் என்றுதான் சொல்ல வேண்டும்.''

''சரி, உங்கள் சாதிக்காரர்...?''

''சாதிக்காரரா? அவர்களுக்கும் இதற்கும்?''

'' நல்லதுக்கில்லாமல் இருக்கலாம்; கிடைக்கு இருக்கலாம். ஆதியில் நான் சேணியன் என்பது.... ஒரு பிராமணர் மந்திர உபதேசம் பெற....?''

''நதிமூலம், ரிஷிமூலம்.... என்பார்கள். கபீர்தாசரும் திருவள்ளுவரும் காத்தியாயரும் நெசவாளர்கள். குலத்தின் காரணத்தால் ஒரு மனிதனுக்கு உயர்வு கிடைப்பதைக் காட்டிலும் ஒற்றை மனிதனால் ஒரு மனிதப் பிரிவுக்கு மேன்மை கிடைப்பது எவ்வளவோ சிறந்தது. நாம் சம்பந்தப்பட்ட வரையில் அந்தப் பேச்செல்லாம் எதற்கு? என் வேண்டுகோள்....''

இன்னும் வேதிடங்களிலும் ஸத் சங்கங்களில் ஊறியிருக்கிறேன்.''

''சரி, புதன்கிழமை வாரும். உம் குமாரனும் வரட்டும். புரோகிதர் ஒருவரையும் தக்க ஏற்பாடுகளுடன் அழைத்து வாரும். வேடிக்கை பார்க்கும் வீண் கூட்டம் வேண்டாம் ; ஆனால் உமக்கு அனுகூலமானவர்கள் சிலர் வரலாம்.''

''சித்தம்.''

* * *

''அருணாசலம்! வா, அப்பா, உன்னை முன்பு எங்கோ பார்த்திருக்கிறேன் ?''

''ஸ்வாமி, அந்த அதிருஷ்டம் எனக்கு லபித்ததாக நினைவே இல்லை.''

''மகனே, உன் தந்தையைக் கூப்பிடு... நாகரத்னம், உமக்கு ஓர் அதிர்ச்சி, ஓர் ஏமாற்றம் காத்திருக்கிறது.''

''அதிர்ச்சியா, பிரமோ ? சீக்கிரம் சொல்லுங்கள். பையனிடம் தோஷம் ஒன்றும் இல்லையே ? என் மனம் பதறுகிறது.''

''தோஷமா ? இன்று சந்நியாசம் பெற்று என் வாரிசுதாரராக வர இருப்பது உன் அருணாசலம்தான் அப்பனே !''

''ஸ்வாமி, என் தலை சுழல்கிறது.''

''ஆராய்ந்துதான் சொல்கிறேன், நாகரத்னம்!''

''சிறுவன், கல்யாணப் பேச்சு தொடங்கியிருக்கிறது. எவ்வளவோ லௌகீகக் காரியங்கள் இருக்கின்றன. இதென்ன, எனக்குப் பரீட்சையா ?''

''உமக்குச் சிரமமாகத்தான் இருக்கும். சமாளித்துக் கொள்ளும். நானும் எதிர்பார்க்கவில்லை. நீரும் அறியீர். ஆனால் திரைக்குப்பின் இதற்குத்தான் ஏற்பாடுகள் நடந்திருக்கின்றன....''

''திரைக்குப் பின்னாலா ?''

''பல திரைகளுக்குப் பின்னால். பல ஜன்மங்களாக அருணாசலம் பல நாடுகளில் பல நாகரிகங்களுக்கிடையில் பல உருவங்களில் இன்றைய தீட்சைக்காகத் தயாராகிக் கொண்டு வந்திருக்கிறான். என் திருஷ்டியைக் குறிப்பாகச் செலுத்தி இப்பொழுதுதான் ஆராய்ந்து பார்த்தேன். மனம் திடப்படட்டும்.''

''மனம் மறுக்கிறது, பகவன். நான் தந்தை, அவன் மகன். என் வயதில் பாதிகூட இல்லை. நான் முறையாக உபநிஷத்துக்கள், கீதை, ஆழ்வார்கள் நாயன்மார்களின் அருள் வாக்குகள் முதலியன படித்திருக்கிறேன். பெரியவர்களுக்குச் சேவை புரிந்திருக்கிறேன். அவன் பல்கலைக் கழகப் படிப்புதான் அறிவான்......''

''நாகரத்னம்! கீதை பாராயணம் செய்தும் வயதில் பெரியவன் சிறியவன் என்று பேசுவதா? முன் பிறப்புக்களின் பயிற்சிகளும் சாதனைகளும் சம்பாத்தியங்களும் வீண் போகுமா ? உம் மன நிலை எனக்குப் புரிகிறது. மட்டமான உணர்ச்சிகளுக்கும் எண்ணங்களுக்கும் இடம் கொடாதீர்.''

''நான் என் மகனுடன் போட்டியிடுகிறேன், பொறுமைப்படுகிறேன் என்ற கருத்தா ?''

''என் வாயிலிருந்து வந்த வார்த்தைகளல்ல அவை. ஆனால் இன்றைய சோதனை கடுமையானது. எனினும், உண்மையில் நீர் பெருமைதான் கொள்ள வேண்டும்.''

''எதற்குப் பெருமை, ஸ்வாமி ?''

''சுவர்க்கத்துக்குச் செல்லும் ஒரு புண்ணியவான், பிறரை அணுகிக் கேட்காமல் உம்மிடம் ஏணி இரவல் கேட்டதற்காக.''

''அப்படியென்றால்...?''

''அருணாசலத்தின் திட்டப்படி அவனுக்கு அனுகூலமான குடும்பத்தில் பிறந்தால் அவன் முன்னேற்றம் துரிதப்படும். வீண் சிக்கலும் கால விரயமும் இரா. உங்களை நம்பி உங்கள் மகனாகப் பிறந்தான். அவன் எதிர்பார்த்தபடியே அவனுக்கு எல்லாச் சௌகரியங்களும் செய்து கொடுத்தீர்கள். தவறான செல்லமல்ல, அவனின் விகாசத்துக்கான வசதிகள் செய்து கொடுத்தீர்கள் — தெரிந்தல்ல, தாய் தந்தையின் நல்ல சுபாவத்தால். அவன் எதிர்பார்த்ததும் அதுவே. நீர் உம் கடமையைச் செவ்வனே செய்தீர். பெண் உரிய காலத்தில் கணவன் வீட்டுக்குச் செல்வதுபோல் அருணாசலம் இங்கு வர இருக்கிறான்.''

''ஸ்வாமி, தந்தை என்ற ஹோதாவில் நான் இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதியாவிட்டால்?''

''சூரியனைப் பார்த்து இனிய கனவுகளுடன் படரும் மல்லிகைக் கொடியை ஒரு கூடாரத்துக்குள் சிறைப் பிடித்தவர் ஆவீர்.''

''ஸ்வாமி, இது விந்தையிலும் விந்தை. அதிர்ச்சி என்றீர். அது இலேசான வார்த்தை. பட்டாக சுட்டால் தாங்குபவனுக்கு அதிர்ச்சி; அணு வெடிப்பு — உருத் தெரியாமல் வாயுக்களாக மாற்றிவிடும்.... அப்படியானால், இவன் முனிவருக்கு ஜூனியராகவும் நான் காரியாலய மானேஜராகவும் இருப்பதா ?''

''உம் விருப்பம். உம் தன்மைக்கு ஒத்து வருமா என்று யோசிக்கிறேன். மேலும், லாபகரமாகவும் சிறந்த மனித உறவோடும் இயங்கும் உம் தொழில் என்ன ஆவது? நல் மனம் படைத்த இருவரும் இல்லாவிட்டால் தொழிலாளி முதலாளி உறவு பங்கப்படாதா? சிறிது காலம் வேர்களை இன்னும் பலப்படுத்தி, நம்பிக்கையான டிரஸ்டு ஏற்படுத்திவிட்டு, அதன் பிறகு வாழ்க்கை வழியில் மாற்றம் தேடலாம். உம் மனம் இப்புனித நேரத்தில் ஒரு தியாகத்தை நாடிற்று. இதுவும் ஒரு தியாகமே. புத்த பகவான் சுய இச்சையுடன் உலகச் சிக்கலில் அவதரித்த, இறங்கிய, தியாகம் போன்றது — ஆனால் சிறிய அளவில். இது என் யோசனை. ஆனால் முடிவு உம் கையில் இருக்கிறது.''

''சித்தம் பகவன்; அவ்விடத்து யோசனையே சரியாகத் தோன்றுகிறது: வேறு எப்படியிருக்க முடியும்? விடைபெறுகிறேன். அருணாசலம், பெரிய பொறுப்பு; தக்கபடி நடந்து கொள்வாய் என்பதை அறிவேன்.''

''நாகரத்னம், சற்றுப் பொறும். யாரங்கே எல்லாரும் வரலாம்.''

வேத கோஷத்துடன் அனைவரும் உள்ளே நுழைந்தனர்.




★வட்டமேஜைப் பகுதியில் திரு கமலவேலன், டூரிஸ்ட் கைடு ஒருவர், ஸ்ரீரங்கம் கோயிலில் கோபி கிருஷ்ணன் விலைக்கு விளக்கம் தந்தது பற்றி வருந்தி எழுதியதைப் படித்தேன்.

ஸ்ரீரங்கம் கோயிலில் தான்தோன்றித்தனமாக வந்த ஒரு 'கைடை'ப் பார்த்துவிட்டு, 'இவர்களெல்லாம் கைடாகப் பணிபுரிந்து நம் பண்பாட்டைக் குலைக்கிறார்களே' என்று அவர் வருந்துவதன் காரணம் புரிகிறது.

சென்னையில் உள்ள மத்திய அரசாங்கத்தின் டூரிஸ்ட் இன்ஃபர்மேஷன் சென்டர், மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை ஒரு "கைட் கோர்ஸ்" நடத்துகிறது. சரித்திரம், சமூக இயல், அரசியல், பூகோளம் போன்ற பாடங்களில் பட்டம் பெற்றவர்கள் இதில் சேரத் தகுதி உள்ளவர்கள். வேறு பாடங்களில் பட்டம் பெற்றிருந்தாலும் அன்னிய மொழி, இசை, நாட்டியம், கல்வெட்டுத் துறை போன்றவற்றில் தேர்ச்சி பெற்றிருந்தால் இவ்வகுப்பில் சேரலாம். இத்திட்டத்தின் கீழ் இந்திய நாட்டின் கலை, கலாச்சாரம், மதம், பண்பாடு, தத்துவம், வேதாந்தம், 'மேரீழி', அரசியல், நாட்டியம், சரித்திரம், கோயில்கள் — இன்ன பிற தலைப்புக்களில் இருபத்தைந்து நாட்களுக்குத் தேர்ச்சி பெற்ற விரிவுரையாளர்களால் வகுப்பு நடத்தப்படும். (உதாரணமாக: ஹிந்துமதம் பற்றி டாக்டர் ராகவன், நடனக் கலை பற்றி ஸ்ரீமதி ருக்மிணிதேவி, தத்துவம் பற்றி டாக்டர் டி. எம். பி. மகாதேவன், கோயில்களைப் பற்றி திரு நாகசாமி) வகுப்புக்கள் முடிந்ததும் பிராக்டிகல் டிரெயினிங் என்று காஞ்சி, மாமல்லபுரம் போன்ற இடங்களுக்கு அழைத்துச் சென்று விளக்குவார்கள். இதெல்லாம் முடிந்த பிறகு ஆறு மணி நேரத்துக்குக் கடுமையான எழுத்துத் தேர்வு ஒன்றும் வைப்பார்கள். தேர்வைத் தொடர்ந்து, "பிராக்டிகல் டெஸ்ட்". இதில் கைடு பேசும் முறை, விவரிக்கும் திறன், பொது அறிவு, பழகும் விதம் — இவை சோதிக்கப்படும். இவற்றில் தேர்ச்சி அடைந்தவர்களுக்கு அடையாளக் கார்டு வழங்கப்படும்.

இவ்விதம் தேர்ச்சி பெற்ற அரசினரின் அங்கீகாரம் பெற்ற கைடு எவரும் திரு கமலவேலன் கேட்ட மாதிரி கிருஷ்ண விலைக்கு அர்த்தம் கொடுத்திருக்க மாட்டார்.

★ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

சில ஹிப்பிகளும், கூட்டமாக வரும் நடுத்தரவர்க்கப் பிரயாணிகளும் அங்கீகாரம்பெற்ற 'கைடை' வேண்டமாட்டார்கள். ஏனெனில், அதற்குச் செலவாகுமே! அம்மாதிரியான சுற்றுலாப் பயணிகளுக்கு ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம், மாமல்லபுரம் போன்ற இடங்களில் சில 'தான்தோன்றி'கள் கைடாகப் பணிபுரிந்து எங்களைப் போன்ற அங்கீகாரம் பெற்ற கைடுகளுக்கு இழுக்குத் தேடுகிறார்கள்.

அரசினரின் அங்கீகாரம் பெறாத வழிகாட்டிகள் சுற்றுலாப் பயணிகளுக்கு விளக்க உரை கூறுவதைத் தடை செய்யக்கூடுமானால் நல்லது.

சென்னை—33 வருணா வரதராஜன்
26—5—71 (அப்ரூவ்ட் டூரிஸ்ட் கைடு)

அரசுடைமையாக்கப்பட்ட பிறகு பாங்குகளிலெல்லாம் முன்போல் ஒரு ரூபாய் நோட்டுக்களும், இரண்டு ரூபாய் நோட்டுக்களும் பெற்றுக் கொள்ளப்படுவதில்லை. இதனால் மிகவும் பாதிக்கப்படுகிறவர்கள் வியாபாரிகள்தாம். ஏழை மக்கள், வசதி படைத்தோர் ஆகிய எல்லோரிடமும் அதிகமாகப் புழக்கத்தில் உள்ளவை இந்த ஒரு ரூபாய் நோட்டுக்களும், இரண்டு ரூபாய் நோட்டுக்களுமே. ஒரு தடவைக்கு நான்கு தடவையாகக் கை மாறுவதால், மிகவும் அழுக்கு அடைந்து கிழியும் தறுவாயில் உள்ளன. வியாபாரிகள், தங்கள் வாடிக்கைக்காரர்கள் கை மாறாமல் இருப்பதற்காக ரூபாய் நோட்டுக்கள் எப்படி இருந்தாலும் பெற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் அந்த நோட்டுக்களை பாங்குகளில் கொடுத்து மாற்றி விடலாம் என்று நினைத்தால் அங்கு பெருத்த ஏமாற்றம். ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் நோட்டுக்கள் கையில் வைத்திருப்பதைப் பார்த்தால் பாங்க் ஊழியர்கள் முகத்தைச் சுளித்து இந்த நோட்டுக்களையெல்லாம் இங்கு கொண்டு வர வேண்டாம் என்று வாங்க மறுத்து விடுகிறார்கள். வியாபாரிகள் நஷ்டமடைய வேண்டியதாகிறது.

ஈரோடு — 1
25—5—71 என். என். சுப்பிரமணியம்

சில, கைத்தொழில் பொருட்காட்சிகளில் 'இசைத்தட்டு நடனம்' என்ற பெயரில் ஆபாச நடனம் நடப்பதை, காவல் துறை அதிகாரிகள், கண்டும் காணாதது போல் இருப்பது, அவர்களே இதை ஊக்குவிப்பது போன்றுள்ளது.

பொருட்காட்சியில் இரண்டு அமெரிக்கப் பயணிகளைச் சந்தித்த போது, "தமிழ் நாட்டில் இப்படியொரு கீழ்த்தரமான நடனத்தைப் பார்ப்போம் என்று எதிர்பார்க்கவில்லை. இது 'காபரே' நடனத்தைக் காட்டிலும் மோசமானது" என்றார் அவர்களில் ஒருவர். வெட்கித் தலை குனிந்தேன்.

கோவை—18
25—5—71 எஸ். பாபு


Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# சிறந்த அழகின் ஆதாரம்: அனுதினமும் உட்கொள்ளுங்கள்

அழகின் ரகசியம் ஆரோக்கியம் என்பதை நீங்களும் அறிவீர்கள். உங்களின் சுறுசுறுப்பும், தெளிவான சருமம், ஒளி சிந்தும் விழிகள், பளபளப்பான, எழில் வாய்ந்த கேசம் இவையெல்லாம் உங்கள் அழகின் கண்ணாடி.

இவையனைத்தையும் நிரந்தரமாகப் பாதுகாக்க உங்களுக்கு சமசத்துணவு தேவை. பெரும்பான்மையோர் ஆரோக்கியத்திற்கு எது தேவையோ அதைச் சாப்பிடுவதில்லை—போதாக்குறைக்கு சீதோஷ்ண நிலையும் அயர்ச்சியடையச் செய்து விடுகிறது.

ஆகவே மனம் தளர வேண்டாம். உங்களுக்கு அத்தியாவசியமான போஷண சத்தை 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே-யிலிருந்து பெறலாம். அதில் 11 வைட்டமின்களும் 5 தாது உப்புகளும் அடங்கியுள்ளன.




மருந்து வியாபாரிகளிடமிருந்து இன்றே 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே வாங்குங்கள்.

'விடாமினெட்ஸ்' ஃபோர்டே ஜீவ சத்து நிறைந்த மின்னும் சிவப்பு மாத்திரைகள். ஒரு நாளைக்கு ஒரு மாத்திரை, அழகுக்கும் ஆரோக்கியத்திற்கும் தேவையான ஊட்டங்களை அளித்துவிடும்

## 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே

டிரேட் மார்க் 'ரோஷ்'

'நாளொன்றுக்கு 15 பைசாவிலும் குறைந்த செலவில் ஆரோக்கியமும் சக்தியும் பெறுங்கள்'

'ரோஷ்' தயாரிப்பு

VT-2553A

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

அடேயப்பா, வளர்ச்சியின் உச்ச தசை!
இப்படியொரு மகத்தான மாறுதலை விளைவிக்கமுடியுமா ஒரு டானிக்?





# ஆம், வளர்ச்சிக்கான பசியை உங்கள் குழந்தைக்கு வளமுடன் வழங்குவது இன்க்ரிமின்*

நாளொரு மேனியாக உங்கள் குழந்தையை வளரச் செய்வது இன்க்ரிமின். அது பசியைத் தூண்டி, வயிறார உண்ணும் மிகுதியான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது. எப்படி? சாப்பிடும் புரத சத்துக்களை நன்கு பயன்படுத்திக் கொள்ள உதவுகிறது. காரணம், வைட்டமின்களோடு, வழக்கமாக நம் உணவில் குறைவாக உள்ள ஓர் அமினோ அமிலமும் செறிந்துள்ளது: செர்ரிப்பழச் சுவையுள்ள இன்க்ரிமின்... குழந்தைகளுக்கு அன்றாடம் கொடுத்து வாருங்கள், ஒருசில மாதங்களிலே கண்கூடாகக் காண்பீர்கள் மாறுதலை.



இப்போது, ஒரு மாதத் தேவைக்கும் மேற்பட்ட அளவு இன்க்ரிமின் ஸிரப் விலை ரூ. 12.99 தான், டிராப்ஸ் ரூ. 9.81 தான் (3 புட்டிகள்).
எக்ஸைஸ் வரி உள்ளிட்ட விலைகள் இவை.

## இதுவே கண்கண்ட வளர்ச்சிப் பருவம், இன்க்ரிமின்* பருவம்

பெரிய குழந்தைகளுக்கு (இரும்புச் சத்து அடங்கிய) இன்க்ரிமின் ஸிரப்—175 மிலி. & 57 மிலி.










இளங்குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் 10 மிலி.



எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.

உலகெங்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு பெயராகிய லெடர்லி தயாரிப்பது இன்க்ரிமின். லெடர்லி டிவிஷன், ஸயானமிட் இந்தியா லிமிடெட் 254/D2, டாக்டர் ஏ. பெஸண்ட் ரோடு, பம்பாய் 25.

* அமெரிக்க ஸயானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

லின்டாஸ்-INC-13-140 TM